சிவமயம்.

இந்நூல்செய்தவரோடு

ஒருங்குகற்ற ஒருசாலைமாணாக்கராகிய

ம-ா-ா-ஸ்ரீ

காயாறு

# ஞானசுந்தரையரவர்கள்

சொல்லிய

## சிறப்புப்பாயிரம்.

———:o:———

ஆசிரியவிருத்தம்.

பேசுமறைப்பொருளன்பர்க்கின்பூட்ட
மாமகிழ்க்கீழ்ப்பிரியாவாக்கம்
ஆசுகவிபொருந்தவருந்தமிழ்மாலை
யணிகென்னவறிவாற்சான்ற
வீசுபுகழ்ப்பூண்டிமகிழரங்கநாதன்
சொல்லவிளம்பினால்
மாசிலருட்குரவன்வழியொழுகு
வேலாயுதனும்வாய்மையோனே.

சுபமஸ்து.

உ

சிவமயம்.

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

திருவொற்றியுங் கச்சியு மிடங்கொண்ட

படம்பக்கந் திருவேகாம்பர முடையார்.

# மகிழ்மாக்கலம்பகம்.

## காப்பு.

வஞ்சித்துறை.

திருவாரொற்றி
யொருவேகம்பம்
மருமாத்தமிழைத்
தருமேரம்பனே.

கட்டளைக்கலித்துறை.

கச்சிமலர்ந்தவொருகாமக் கோட்டத்துக்கற்பரசி
நச்சியகம்பச்செழுந்தேனை நானுநயந்துளத்தே
வைச்சுவந்தொற்றியிருந்தேற்கு வான்சுவைதான்விளைத்த
துச்சியிருந்தடிகாறுங் கலம்பகத்தோர்வேழமே. (க)

ஒற்றியமர்ந்துயர்மாவடி வீழுமொருகனிக்கே
பற்றினிருந்தேன்பரிசு பரிந்துகலம்பகமாக்
கொற்றமயிலொடுசேவலும் பெற்றோர்குறத்திபின்போம்
வெற்றிவைவேலவ்விடலைதந்தான் சுவைமெய்யுறவே. (உ)

ஒருபோகுமயங்கிசைக் கொச்சகக்கலிப்பா. ஆறடித்தரவு இரண்டு.

பொன்மகள்சொன்மகளேத்தும் பொலம்புரிசெஞ்சீறடியாள்
வின்மலைவேந்தொருபுதல்வி வியலிருக்குப்புகழ்முதல்வி
தன்மலர்ச்செங்கைபற்றித் தீவேட்டபின்றனித்து
முன்மருவுநக்கத்துப்பலிகொள்ளு முயல்வொழித்து
நன்மனைச்சீரறமோம்பு நயப்பெய்தியிருநாழி
நென்மலையாவித்தாக நிறைகம்பினூட்களித்தோய். (க)

பரிதிநெடுமண்டிலத்துப் பகல்விளக்கியின்னுழையும்
விரிகதிரினணுப்புரைபல் விலகண்டமத்தனையும்
இருவிமிசைப்பசுக்கணத்தின் முற்றூட்டாவினிதமைத்துத்
தருவளனும்வான்யாறும் வளம்படுத்தித்தரணிமிசை
யுருவளர்பூந்திருக்கச்சி யொருகம்பமுறுவரையா
மருமலர்த்தண்மீமகிழின் வாழ்வாங்குவாழ்வோய்கேள். (உ)

பல்வேலிப்பயிர்தழைப்ப வைப்பரூர்தொறுநின்பேரால்
நெல்வேலிவைத்தாரை நீணிலத்திற்காணேமால். (௫)

ஒற்றியூர்வைத்ததற்பி னுறைவாகவாரூரும்
உற்றுமச்சோற்றுத்துறையொன் றுறுதிபெறவைத்ததென்னே. ( )

நெய்வேள்விப்பிறர்செய்யப் பொருதழித்தோராளவளவா
வைவேள்விசெயத்துணிந்த தழகறவோர்க்கறமுரைத்தே. (௭)

ஆளின்றிக்குற்றேவற் காவணஞ்செய்தடாவழக்கா
லாள்கொண்டங்கவற்கேவ லாளாகித்திரிந்தனையே. (௮)

விளைவித்தவினைப்பாடு மெய்யுணர்ந்துமுணரார்போன்
முளைவித்துவறுத்தூட்ட முழுவிருந்துமாயினையே. (௯)

வைப்பார்போலோடுகோவ ணம்வைத்துக்காவிற்கொண்
டிப்பாரில்வல்வழக்கிட்டது வொப்பதுண்டேயோ. (௧௦)

உடையானென்றொருபேரிங் கெவ்வாறோவுற்றததற்
கடையாளமறிந்துரைப்பார் யாரென்பாரவர்சிலரோ. (௧௧)

படம்பக்கமிடங்கொண்ட பழம்புகழ்த்தியாகேசனென
உடங்கியையாரணமொழிகேட்டுவந்தடைந்தார்புலவரன்றே. ( )

நாற்சீரடி யம்போதரங்கம் இரண்டு.

உரைக்குமவ்வுரையெலாமுலகனைத்தையும்
வரைப்பினின்வான்புகழ்மாந்திநின்றதே
வள்ளனின்கருணைமாமடைதிறந்தன்றே
கள்ளவக்கூற்றரங்கடந்துசென்றதே.

நாற்சீரோரடி யம்போதரங்கம் நான்கு.

கையதுவில்லெனக்கனகமரல்வரை
மெய்யதுவில்லெனவெள்ளிவீழ்வரை
யாவருமறிவர்காண்மன்றம்பொன்னது
மூவர்தந்திருவெலாமுடிவினின்னது.

முச்சீரோரடி யம்போதரங்கம் எட்டு.

தனதனையிகுளைநசைத்தனை
சதமகனடிமையிசைத்தனை
மனுவழியுலகையசைத்தனை
மலையரசுறவுபசைத்தனை.
மணிவலனுடலினிறீஇயினை
வரிவளைபகர்செய்குறீஇயினை
கணியிறைகுருவினுறீஇயினை
கடமுயிர்பொருள்கள்பெறீஇயினை.

இருசீரோரடி யம்போதரங்கம் பதினாறு.

சித்தியெத்தனை
யுற்றதத்தனை
தெளிநர்கைத்துணை
பெறவும்வைத்தனை.
முத்தியாயினை
பத்திமேயினை
முதல்வனாயினை
முழுதுமேயினை.
தலைமைசான்றனை
புலமையான்றனை
தவமுமார்ந்தனை
நவமுமோர்ந்தனை.
அலகிலாணையை
அளவில்கோணையை
ஆக்கவல்லையே
யார்க்குநல்லையே.

எனவாங்கு. இது தனிச்சொல்.

ஆசிரியச்சுரிதகம்.

முறைவெளிப்படுத்த மறைமொழிவழிதெரீஇப்
பழிச்சினர்பரசிப் படர்குறிற்பரிசில்
நல்குதல்வேண்டு மல்லதையிவறுபு
காசிலைச்சிறிதுமெனக்கைவிரித்துத்
தேசுடைமன்றத்துச்செந்தீயேந்தி
மெய்வெளிகாட்டிவேண்டுநர்வேண்டியாங்
கையமின்மையாடினுமகலார்
காலைத்தூக்கிக்கொண்டதுசானு
மாயினும்விடார்நேயமிக்குற்றார்
ஆதலினடிகேளாய்தலங்கமைத்து
மாதுகாதலியும்வள்ளனீரும்
காதலினளித்தகம்பஞ்சோறமையும்
குடிமுழுதுரிமையுமக்கேவழிவழி
யெமையாட்கொளினுமக்கெய்துமில்வாழ்க்கையே. (௧)

நேரிசைவெண்பா.

இல்வாழ்க்கையாகா தினிதாகவில்வாழ்க்கை
செல்வாயறுதொழிலைச் செய்தருள்க—மெல்ல
வறுதொழின்மேற்கொள்ளற்க யார்க்குமதிமேலோ
யுறுதியொற்றியூர்க்கே யுவந்து. (௨)

கட்டளைக்கலித்துறை.

உவந்தாயொருகம்பமாயினு மென்னையுழைப்பொன்றின்றிச்
சவந்தாங்கிக்கச்சிமயானத்தி னூடுதறக்ககொலாம்
நவந்தாங்கறஞ்செயிமவான் மகளுளநாணிப்பிலந்
தவந்தாங்க நரங்கள்பவந்தாங்கவிட்டையதாரணிக்கே. (௩)

நேரிசைவெண்பா.

தாரணிக்கேதாரணித்தேர் தாரணியாநின்றக்காற்
பேரணிக்கேபேரணியாப் பேசுவதென்—னாரணிக்கே
வன்னிப்பெருஞ்சூழல்வைத் தொற்றிவந்தீரேல்
என்னினிப்போர்ச் சேவகமேற்றீர். (௪)

கட்டளைக்கலித்துறை.

ஏற்றீர்நகையகல்பெற்றும் புரஞ்சுடவேறுமண்டேர்
காற்றீரவைப்பதன்முன் னச்சுமிற்றதுகைக்கணைக்குந்
தோற்றீர்வலவன்றறிதலை யாவன்றுணையுமிலீர்
சாற்றீரக்கச்சிசேர்மாவடிக் கீழ்க்குடிச்சார்பிதென்னே (௫)

கொச்சகக்கலிப்பா.

என்றொறுக்கொண்டாலும் யாறொற்றிப்போவதிலை
முன்றொற்றிக்குறிவைத்தாண் முளரிக்கைவண்டாலே
மின்றொற்றிவிளங்கிடைச்சி விழைதகுபாறயிர்பெய்து
பின்றொற்றித்தரணிக்கேன் பெருமவுனைக்காணுதற்கே. (௬)

கட்டளைக்கலிப்பா.

காணுதற்கரிதாகுங் கள்ளக்கம்பன்
காதல்செய்பவர்காசெலாங் கொள்ளைகொண்
டூணுறக்கமிலாதலமந்தவ
ருள்ளவான்பொருள் யாவுங்கவர்ந்தரோ
பூணுகோவணம்வைத் தொளித்தங்கவர்
பொதியெலாம்வஞ்சித்தோடு மோர்நாள்கள்வரி
நாணுமாதர்கலை வளைவவ்வித்தா
னல்லகம்பனெனப் பெயர்பூண்டதே. (௭)

கலிநிலைத்துறை.

பூண்டாராமைபொங்கரவென்புபொருகேழ
லீண்டார்கோடுபுன்றலைமாலைநிறைசெல்வ
மாண்டாரொற்றியார்பரமேசனவரென்பார்
வேண்டார்போலும்பேர்க்கமைவேட்டும்வியப்பம்மா. (௮)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வியந்தவனைவியப்பழிக்குஞூரண்மறலி யுரங்கிழிந்துவிறலும் வீயப், பயந்தடைந்தபாலனுயிர்பரிந்தளித்துப பயங்காப்பேர்ப டைத்துவீர, வயந்திகழுங்கழற்பதத்தர் மணியேகாம்பரமுடையா ர்மன்றவாணர், நயந்திருந்தாரொருகன்னிகாப்பினென நவிலும் வையநகையாமன்றே. (கூ)

பிச்சியார். இதுமுமது.

அன்றிருக்குமுதல்வர்சா ரூபத்தாலே யணிசூலங்கையேந்தி யாடுகின்றீர், நன்றிருக்குமொற்றிநெடுநெதெருவிற்பிச்சி நகைமலர் சூடியபிச்சியாரேயன்பை, நின்றிருக்குநுதலேனுக்கனேர்ந்தவேளை நீர்விளித்தீரானுலுனைவிங்கேதுந், துன்றிருக்குக்கரும்புகையேமி க்குச்சாலத் துயாசெயுந்தீர்வகைபினுதரஞ்சூழீரோ. (கo)

அம்மானை-கலித்தாழிசை.

ஆதரவாரேகாம்பரமுடையாரோரொட்டு
மாதர்தோளாசைமருவினர்காணம்மானை
மாதர்தோளாசைமருவினரேயாமாகிற்
காதல்வைப்பளேகாமக்கண்ணிகாணம்மானை
காணரும்போகியர்க்கியாரேகாதல்செயாரம்மானை. (கக)

கலிவிருத்தம்.

மானைநோக்கிமகிழ்வலப்பாதியின்
ஞானநோக்கினர்பாதிநயந்ததை
யேனைப்பாதியிற்பாதிசெய்தேற்றிப்பின்
கானமாக்கினரொற்றிக்கண்டோலகற்றே. (கஉ)

பஃறொடைவெண்பா.

தோலுந்துகிலுங்குழையுஞ்சுருடோடும்
பால்வெள்ளைநீறும்பசுஞ்சாந்தும்பைங்கிளியுஞ்
சூலமுந்தொக்கவளையுமுடைத்தொன்மைக்
கோலமேநோக்கிக்குறித்ததிருநாமம்
போலுமேயம்மையப்பரொன்றுப்பொய்யாகாமைச்
சாலவியலுமொருவரெனப்பாலமைத்த
சீலத்தமிழிற்றெரிந்திசினோர்சீரறிஞர்
மாலற்றசிந்தையிற்கச்சிவளம்பாடினார்
ஏலப்பேருகவெமக்கு. (கங)

செவிலிகூறல். கட்டளைக்கலித்துறை.

குடக்குட்டுவன்புனைபொன்வண்ணத்தார்மகிழ்வார்மகிழார்
இடக்குட்டுவன்றனையென்மகளேயினியாரினியார்
கடக்குட்டுவெந்துவங்காட்டுநர்காதலுங்காதல்கொலாம்
படக்குட்டுவன்மோதிரக்கையென்றுள்ளம்பரித்தனையே. (கச)

புயவகுப்பு. வண்ணவிருத்தம்.

தனன தனதனன, தனன தனதனன, தனன தனதனன
தத்தத்தனந்தன.

பரவுமுழையுறுவர், பாசுபதயுகள, பதுமமலர்முருகு,
வைப்புற்றணங்கின
பறவைநிகர்நகர, மெரியமடுக்குழைய, மகிழ்வின்மகளுதவ,
வெற்பற்கிணங்கின
பகல்செயிருசுடர்க, ளுறுபுணகலவகழ், நயநவிறவுளர்கை,
கைப்பற்றிநின்றன
பசியவனைநகிலி, னணைபுசுவடுபுரி, பருமமணியிடைகொ,
டிச்சிக்கிசைந்தன (௪)

விரவுகிளிமொழிசெய், பனவர்மனைமயில்கள், விழைவினகமருவ,
துப்பிற்பசைந்தன.
விரகினுளியநல, மணியவணிபுலிகொள், விபுதசடைமவுலி,
யத்திக்கியன்றன
விரைசெய்நறுமதலை, வழிபுமதுசகுன, வளியர்சிறுகுடியில்,
விற்பெற்றுயர்ந்தன
விமலமுறுபுகலி, முனிவர்தமிழ்மறையி, னமுதவருவியொடு,
பொற்பிற்பொலிந்தன (௫)

உரவுதொயில்வரையு, மிறைவிகாமலரோ, டகருமிருகமத,
மொய்த்துக்கிடந்தன
உலகமுயமறையி, னடுவுணடுவுணடு, விலகுதிருவைவன,
முற்றிப்பரந்தன
உடலொடுணர்வுரையு,மொருவவொருநல்வழி,யொழுகுமவரமல,
முற்றுற்றதொண்டகம்
உறுவமலதிமிர, மகலவுயர்கயிலை, மலியும்வடநிழலி,
னெட்டவ்விபஞ்சிய (௬)

காவிலருணடந, நவிலுமிரவுரிய, கவுணிகுறளுரிய,
பட்டுக்கிளர்ந்தன
கருவிமொழுவகைய, புணர்தலெலமையுரிய, முதலதிணையியைப,
வொத்துக்குறிஞ்சியைக்
களிறுதரளமன, முடையபரவவொளி, ரறிஞருடையதொரு,
கச்சிப்பெரும்பதியர்
கனகசபையில்வெளி, யுருவுபெறுமமுதர், கருணைமொழியெழுது,
கொற்றப்புயங்களே. (௧0)

கொற்றியார். ஆசிரியவிருத்தம்.

கொற்றியாரேயெங்கண்மாமடிகள் குடமாடல்கும்பிட்டாரங்கே
பெற்றனீர்போலுமெழிற்குடமாட லவர்போற்சங்காழிபெற்றீர்
ஒற்றியூரிறைவரிடமாலாயுற்று ரவர்நீரொற்றியூரே
பற்றினேமிடமாலாயுற்றனிரோற் சாரூபம்பலித்ததாமே. (௧௫)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

பல்லார்வெண்டலையேந்தித்தோலுடுத்துப்பலிக்குழன்றபண்பா
ற்கச்சி, வல்லாளாவல்விடத்தைக்கடல்வேந்த னினக்களித்தான்
மணிபொன்னுடை, எல்லாமுங்கண்டந்தமாலுக்கு மகட்கொடுத்
தானில்லாதாரை, எல்லாருமென்னுவர்செல்வனாச்சிறப்புச் செய்
வனொன்றதியன்றவாறே. (௧௭)

நேரிசைவெண்பா.

என்றதென்கொலொற்றியார் கையிலிரப்போடாக
அன்றுவணங்கா வயன்றலைதான்—நின்றதென்றால்
கோளில்பொறியிற்குணமிலவே யெண்குணத்தான்
றாளைவணங்காத் தலை. (௧௮)

இதுவும்நேரிசைவெண்பா.

வணங்காத்தலைகச்சிவள்ளல்பலியோடா
விணங்காத்தலைசிறந்ததேற்கும்—அணங்கேகேள்
சொல்லப்பயன்படுவர்சான்றோர்கரும்புபோற்
கொல்லப்பயன்படுங்கீழ். (௧௯)

கட்டளைக்கலித்துறை.

கீழிடந்தும்மேற்பறந்து மக்கேழலும்புள்ளுமொரு
வாழிடந்துன்னிலமன்னுயிரத்தனைக்கும்புகலாச்
சூழிடமாமகிழ்வாயொற்றிநின்றவூரப்பெயரா
வீழிடமேவவைத்தார்பொதுவார்க்கென்னவீறிதுவே. (௨௦)

மறம் - இரட்டையாசிரியவிருத்தம்.

வீறுசெருக்கிற்சிறுவிதியால்வேட்டமகக்காதலின்வந்த
விண்ணோர்பாடுவிளம்புவதேன் விரிஞ்சன்பறந்தான்குட்டொன்
சீறுமவன்றாதையர்தோள்கள்சிதைந்தமனைவிமருகிமணந் [றால்
தேருநாசிவார்குழலுஞ்செவியும்போயவவண்மருக
னூறுபட்டானினங்குணமுற்றிலன்கண்பல்லுமொருங்கிழந்தா
னுவனோர்தோழனொருவில்லியாலேயுணராய்போலுமது
தேறுமொருமாமகிழ்ப்பொருளையல்லாற்றேறுமறக்குடியேஞ்
சிறுமிமதிக்குமவளோநுந்தேர்வேந்துரையைச்சிறுநூதே (௨௧)

சித்து - சந்தத்தாழிசை.

தேவரிற்பெரியமாமகிழ்ப்பரமர்செய்யதாண்மலர்சுமந்திடுஞ்
சித்தரேமுடையுவிதனையோபெரிதுசீர்மலைக்கிறைவன்மாமகள்
ஆவனுற்றபடிகந்திருதமொடுகூட்டிலிங்கமதனைவைப்புவைத்
தருமனைசிலையிணக்கிவீரமுறுபூரயாணியரிதாரமு
மேவவுப்புமுப்பூழ்டிந்தவகையாவர்காணவலர்கண்டபின்
வேறுபோக்கதைவிரும்பிலார்களெனயக்களங்குமுடிவாயிடும்
தாவறும்பழையலோகம்யாவுமுயராடகம்புரியலாமிதிற்
றமனியக்கிரியுமுறவதாகவவடந்தையார்க்குமுனளித்ததே. உஉ

இதுவுமது - பதினசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அளித்ததவள்கணவருக்குமுன்னநாமே
யணியப்பொற்பணியாகச்சிறுகளுகங்
கனித்துப்பொற்றலையர்ட்டிக்களங்கமாகக்
காட்டுமிரும்பினையேதாளகத்திற்கூட்டி
யொளித்ததிலலையிங்கொன்றுமவர்தோழாக்கன்
றுறுசெங்கற்பொன்னனதுலகநகண்ட
திளித்தவாய்மைத்துனர்க்கும்பொன்னைத்தந்தோ
மினியூரொற்றியதுமகிழீதுமாதோ. (உ௩)

தலைவிருப்புரைத்தல். கட்டளைக்கலித்துறை.

மாதைக்கலம்பகத்துத்தமையாற்றும் வனப்பையெல்லாம்
தீதற்றசந்நுவநந்தனன்பின்னைந் திணையுரைத்தோன்
ஆதித்தன்முன்னோரகத்தியன் றக்கனுமாய்ந்துவப்பார்
வேதப்பொருள்கச்சியூர வெவன்கொல்விளம்புவதே. (உ௪)

சம்பிரதம். எண்சீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

விளம்பருமாமகிழ்வாய் மெய்ப்பொருளுணரெம்முடையார்
வியவார்களொருபொருளா யணிமாதியாக
வளம்பெறவண்டங்க ளிந்திரசாலமென்ன
மதித்தார்கவானைக்கா வதனினீர்த்தம்பம்
உளங்கொளருணைபுரியி லக்கினித்தம்பத்தோ
டுயர்வாயுத்தம்பங் காளத்தியிலத்துளவிற்
களங்கமில்கோகரணமிக வியந்தார்களந்த
கண்பதிக்குங்ககசகரணங் காட்டதுமெய்பெறவே. (உ௫)

இதுவுமது.

மெய்யாவாகாயநடை யெவர்க்குங்கற்பிப்போம்
வேண்டினெந்தமலைகளையுங் கனகமதாக்கிடுவோம்
பொய்யாதநூன்முறையே பற்பஞ்சுண்ணங்கள்
பொருந்துசிந்தூரம்மெவரும் புனைந்துரைச்கப்புரிவோம்

நையாமே புலவர்க்குச் சாவாநன் மருந்து
நல்கினர்முன் மாமகிழ்வாய் நங்கள்குருநாமும்
ஐயாவஞ்சங் கற்பமெல்லாமுமுடிததோ
மாறுனுங்கம்பஞ்சோ ருசையொழிந்திலதே. (உசு)

நேரிசைவெண்பா.

ஆசையடங்கக்கையாரும் வானமண்ணினகம்
ஆசையடங்கக் கைத்தாருமே—பாசமவிஞ்
சும்மாவிருக்குமுடிச் சோதியடிநீழனடுச்
சும்மாவிருக்குஞ் சுகம். (உஎ)

இளவேனில். கட்டளைக்கலித்துறை.

இரும்பிறைக்கும்பொன்னிதழிக்கு மாமுடியாரொற்றிசூழ்ந்
தரும்பிறைக்கும்பொழின்மாங் குயிலோடணியார்கடற்கும்
கரும்பிறைக்குங்குடை வெண்பிறைக்கும்வடக்காங்கதிக்கா
திரும்பிறைக்கும்வலிக்கும் மிளவேனிற்றுணைசெய்ததே. (உஅ)

நேரிசைவெண்பா.

செய்கைமுற்றுந்தவமே தீவகத்தாலாறுனும்
உய்கைக்குறுதி யுனகழலே—மெய்யுருவெட்
டாயினையேகச்சியரசே யெவன்வேறு
பேயனையேனெண்ணியது பேசு. (உகூ)

நேரிசைவெண்பா.

பேசும்பொருளுக்கிலக்கிதமாம் பேச்சிறந்த
மாசின்மணியென்றமாணிக்க - வாசகமாந்
தெள்ளமிழ்தைச்சுவைத்தசிர்ச்செவிக் கென்னொற்றியப்பா
கள்ளமொழியேறுமோகாண். (௩0)

வெறிவிலக்கு - கட்டளைக்கலித்துறை.

காணீரிவமேவலைக் கரும்புகைமிக்குச் செய்கணைமலக்கம்
வீணீரம்மையை யழிப்பிரிதென்வெறியாட்டன்னைமீர்
பூணீர்மகிழ்க்கம்பர் பூங்களவேனும்பு..யுமவர்
தோணீர்வலம்புரி யேனுங்கொணர்மின்சுகந்தருமே. (௩க)

மாலைகண்டிரங்கல் - வெளிவிருத்தம்.

கருமேயிதழித்தார் கொடுவந்தத்தாராவே
அருமேகாம்பர முடையாரவரருளாராவே
ஒருமேறென வேதாரிசைசெய்யுமூராவே
வருமேயளவியன் மலையெக்கொடுமைபின்வாராவே. (௩உ)

குறிகாடல் - ஆசிரியவிருத்தம்.

கடம்படுத்ததோண் முருகுகளிகவிழாவயர்வோங்
களப்பச்சைசயிட்டு வெறியாடல் காண்கிற்போம்
அடம்படர்த்தசடையாள ரருள்பொழிகண்ணுளா
ரணியவிடருசெழித்த களர்பொருள்விழுத்ததோளர்
இடம்பழுத்தமறைவாணர் நடம்பழுத்ததாளர்
இசைபழுத்தமாமகிழா ரிதழ்பலித்திடுமோ
குடம்படுத்தமுலைமலைப் பூங்குறத்திகுறிகூறுய்
குடிபழுக்கவளம்படைத்துக் குறிச்சிபுகுவாயே. (௪௪)

குறம் - இதுவுமது.

வாய்ந்தகுறங்கேளம்மே தூதவிலககணத்துன்
வாயிசைந்தகேசாதி பாதமப்பாதத்துக்
கேய்ந்தவிருபுடையு நிலைத்தானங்களவற்று
ளிழுநிலைத்தானமுழு மங்கலமேயாகும்
ஆய்ந்தவுண்டெண்ண நல்லெண்ணமதுபலிக்கு
மன்புடையாய்வாமக் கண்ணுடியதாம்போகந்
தோய்ந்தனையாமைய மிலமாமகிழ்வாயிறைவர்
தூயவருட்கிலக்காணுய் சொல்லுதயநன்றே. (௪௫)

இதுவுமது. கட்டளைக்கலிப்பா.

நன்றிருந்தகுற நிமித்தமம்மே
நச்சினார்க்கினியார் கச்சிகாவலர்
வென்றிவேதப் பரிமேலழகனார்
மெய்யுரைபொய்யா தென்றுமறைத்தவிக்
குன்றினன்வருங்கா லெதிர்நீகண்டாய்
குகநிலக்குக்கூவெனப் பேடைகூடலை
என்றுமின்பம் பெருகுமியல்பிறு
வினைசெய்மாலைமுன்யாலையினையுமே. (௪௬)

தலைவிகிளத்தல். ஆசிரியவிருத்தம்.

மாலழகரொருபாலே மலியழகரிருபாலே வயங்கப்பூண்ட
நூலழகர்மார்பாலே நுதலழகர்விழிப்பாலே நுவலற்கேற்ற
காலழகர்பொதுப்பாலே கருத்தழகரன்பாலே கசிவாழ்ந்த
மேலழகர்மறைப்பாலே விருமபழகர்பெண்பாலே விழைமுதல்பாரோ.

இதுவுமது. தரவுக்கொச்சகக்கலிப்பா

பெண்ணழகரிடம்வலத்துப பேரழகர்நெற்றியமர்
கண்ணழகர்தமிழ்ச்சுவைக்குங் காதழகரினித்திருக்கும்
எண்ணழகர்திருவொற்றி யெழுத்தழகர்பொதுவிருந்த
விண்ணழகர்மண்ணழகர் விழைந்தெம்மையுடையவரே. (௪எ)

மடக்கு - வெளிவிருத்தம.

உடையாரொமையின் புடையார் புலித்தோ லுடையாரே
சடையார்விலவிஞ் சடையார் தருமாகடையாரே
யிடையார்மகிழ் நூலிடையா ருமையாரிடையாரே
படையார்கருத்துன்படையார் மழுவாட்படையாரே. (சகூ)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

ஏவண்ணங்கறுத்திருக்கு மில்வண்ணம்பசந்திருக்கு மிவர்செ வ்வண்ணம், தூவண்ணம்வெளுத்திருக்குஞ் சுடர்வண்ண மிருக்கி ருக்குஞ் சொல்வண்ணம்யா, தோவண்ணமாமகிழ்வாயுறுவண்ண மொருவண்ணவண்ணமாகப், பாவண்ணமொன்றல்லாற்பகர்வண் ணமிலையெமக்கிப் பாரிற்றானே. (ருo)

இரங்கல். கலித்துறை.

பாராரெல்லாம்பார்த்தார் படம்பாடவைமுற்றும்
சேரார்போலச்சேர்ந்தா ரலரொடுதெருவூடே
வாரார்முலையார்வந் தாராய்மாமகிழ்வாணர்
தாரார்கொன்றைத்தந்தான் மாமகிழ்தாணுமே. (ருக)

சந்திரனைப்பழித்தல் - ஆசிரியவிருத்தம்.

மாமடிகண்மகத்தன்று தாளிற்றேய்ப்புண்ட
மதியம்பின்றம்முடிமேல் வைத்தாடன்மகிழ்ந்தார்
ஆமடிதோழீஇபித்தரலர் மகிழார்கடலி
லாலம்வெண்மைகருமையெனப் பிறந்ததிரண்டுண்டே
தாமடியருயவொன்று கைதொட்டாரதுபோய்த்
தமதுகண்டத்தொடுங்கியது தமக்காசைகொண்ட
தாமடியாவகைகாலாற் றேய்த்தொழிப்பாராணர்
நடுத்தலைமேலேறியதே னுடலென்மற்றதுவே (ருஉ)

இரங்கல் - ஆசிரியவிருத்தம்.

நாவிருந்தநயந்தெரிவார் நயந்தபரிசானர்
நடுவில்லாரெல்லாரு நச்சநடுவீதிச்
சேவிருந்தவழகர் விழிக்கலங்காரஞ்செய்தார்
சிறியமதப்பயலொருவன் சிறுகால்விட்டோடி
யேவிருந்தபூகாற்றம் வீசப்பித்தேறி
யினியபாலுங்குமட்டுந் தோழீஇயின்பஞ்செய்
மாவிருந்தும்பணியாரமளியாரங்கொன்றை
மகிழிருந்தார்மாலிலரே மதிமேலார்காணே. (ருங)

மதங்கியார் மடக்கு - ஆசிரியவிருத்தம்.

மதிமுடியார்மேல்விலங்கா மிடையின்மந்தரமே
 மாமகிழ்பாடியவரு நின்னிடையுமந்தரமே
புதியமயல்விளைவிக்கும் புணர்முலைமந்தரமே
 புத்தமுதம்பொழிமொழியி னிசையுமந்தரமே
சதியிலகுநடைக்கு மனப்பெடைக்குமந்தரமே.
 தனிவிழிக்கவ்விராம சரமினிச்சமந்தரமே
வதியமரார்திறையிடுவார் தினமுமந்தரமே
 மதங்கியிரங்கிலையெனிலென் னிலையுமந்தரமே. (௫௫)

நெய்தலிரங்கல்-மடக்கு-இரட்டையாசிரியவிருத்தம்.

நிலையாவாழத்தலையுற்றாய்-நிலையாவாழத்தலையுற்றேன்
 நினையாரனையாரென்போன்றாய்-நினையாரணையார்நெடுங்கடலே
தலையாலங்காடுயர்பனையே-தலையாலங்காடுயரிறைபோ
 தருவார்மாலையளியாரே-தருவார்மாலையளியாரே
மலையாநிலமேயென்மேலே-மலையாநிலமஞ்சுறவிழுமே
 மகிழ்மாவிருந்தாரொருக்காலே-மகிழ்மாசெயுநாளிருக்காவே
சிலையாத்திரியுங்கொடியேநெஞ்-சிலையாத்திருவர்வாக்கரைபோ(யே
 செழுந்தேனுக்குநெய்தால்வீஞ்-செழுந்தேயுருக்குமவிடவிர

வாடைகண்டு தோழிகவன்றது. கட்டளைக்கலித்துறை.

விடந்தைக்குங்கண்டர் படந்தைக்கும்பாம்பர் வியந்தைக்குற்ற
கடந்தைக்குமந்த குடந்தைக்குங்கச்சிக்கு மாகப்பல்கால்
நடந்தைக்குநல்லுடந்தைப் பட்டனளென் னாமுனைக்கோ
மடந்தைக்குநெஞ்சழல் செய்வடந்தைக்கென் மருந்தினியே. ()

தென்றலைப்பழித்தல். சந்தவிருத்தம்.

மருந்தீசனென்பர் மகிழீசனார்கச்சி மாவீசனார்
பொருந்தேசினார்போலு மவர்மேனியழலும் பொங்கேதியரல்
அருந்தேசிறைற்றூழ் ஷணங்காறுதலையு ளாராவாவிநெஞ்
திருந்தாசுகந்தெற் கிருந்தாவருங்கூற்று செற்றன்றியே. (௫௭)

சிந்தியலொருபொருண்மேன் மூன்றடுக்கிய வெள்ளொத்தாழிசை.

 கூற்றங்குறுகுமுனநெஞ்சமே மாமகிழ்வாய்த்
 தோற்றயனையுலகங்காக்குமெஞ் சோதிகழல்
 போற்றிச்சரணம்புகல்.
 காலன்கடுகுமுனநெஞ்சமே மாமகிழச்
 சீலவரியாயுலகங்காக்குமெஞ் செல்வர்கழல்
 ஓலிச்சரணம்புகல்.

சண்டனவன் சாருமுன நெஞ்சமேமாமகிழ்க்கீ
ழண்டனரனுயுலகங் காக்குமெம்மாதிகழல்
தொண்டிற்சரணம்புகல். (ருஅ)

மடக்குவஞ்சித்துறை.

புகலிகாவலர்
புகலினென்புகல்
மகிழமாவலார்
மகிழவாகுமே. (ருகூ)

பூவைத்தூது. மடக்கு. கட்டளைக்கலிப்பா.

ஆவணத்தாரறத்தையன்பர்க்கொளும்
ஆவணத்தாரொரரிந்தவருமறைக்
கோவணத்தார்செந்திவணத்தார்நெற்றிக்
கோவணத்தார்முற்பாவணத்தார்க்கருள்
காவணத்தாரருட்கருவூலத்தார்
காவணத்தார்புகழ்தேவணத்தார்தென்
பூவணத்தார்மகிழ்மாவலார்கொன்றைப்
பூவணத்தார்தருதியெம்பூவையே. (கூ0)

எண்சீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

பூவிருந்தும்புல்லணிவ ரமுதநாகம்
பொருந்தவைத்து நஞ்சுண்பர் புலவோர்மெச்சுங்
காவிருந்தும்புறங்காட்டி லாடல்செய்வர்
கனிவிருந்துங்கனியாரே கச்சித்தாகூ
மாவிருந்தும்பணியார மளியாரொற்றி
மன்னியிருந்தெமக்கொன்று மென்றும்பேராம்
பாவிருந்தபுகழாளர் பழிச்சுநாஞர்
பழமறைபேசுவர் தமிழினபரிசாஞரே. (கூக)

ஆய்ச்சியார்-வேற்றொலிவெண்டுறை.

பரிசுடையார்மாமகிழ்வாய்ப்பாலாட்டுமைந்தர்க் காம்பள்ளித் தாமம், விரிசடையாரொருதிருவாய்ப் பாடிமேவியபொதுவர்விள ங்கிழாய்கைக்.

கோல்வளை யோலிடக் குறுநகை வாளிடச்
சேல்விழி மேல்விழத் திரண்முலைப் பந்தெழ
நூலிடை நோய்செய நுதல்வியர் வரமொழிப்
பாலுளஞ் சுவைதரப் படுதயிர் கடைதலின்
மாலுமென் னெஞ்சுசெய் மாண்பேனே மாண்பேனே (கூஉ)

செவியறிவுறூஉ-மருட்பா.

மாண்புறச்சுற்றேங்கற்றேமென் றுமகிழ்ந்திருப்பீர்
வீண்பிறகற்றது மெய்யுறு—சாண்வயி
ற்ரும்புதற்பொருட்டலா லுலகவர்நமையினிச்
சாம்பிணமெனப்பெயர்தரித்தழையாமுன்
றேம்பிழிமாமகிழ்ச்செல்வன்
பூங்கழல்கற்பது புலமையோர்கடனே. (௩௩)

கைக்கிளை-மருட்பா.

புலவோர்க்கமுதளித்துப்போரவுணர்ச்சாய்த்து
வலமாழிசங்குவாள்வைத்துச—சிலைபிரியா
தையர்மாமகிழாதியர்பாம்பணி
கையமர்கணையோவக்கணை
செய்யவுறையுளோதிருந்திழைவிழியே. (௩௪)

இடையிடைகுறைந்திடைமடக்காய்வந்தவாசிரியத்துறை.

விழுத்தகுமாமகிழாரும்வேதியராரமுதர்
எழிற்கண்ணினுக்குக்கண்டிண்ணனேரேபோலும்
எழிற்கண்ணினுக்குக்கண்டிண்ணனார்சீர்த்
தொழப்பெற்றுடையதொழும்பர்பதத்தார்போலும். (௩௫)

வெண்டுறை.

போலாதபுன்னெஞ்சம்புகலாகாயாகாயேற்புகன்றவாய்மை
மாலாதோமறைகளெல்லாமாலுமேல்வையகிலைமன் னும்போலாம்
நோலாதேன்பலப்பலவுநுதல்கிற்பேனுதல்கிற்பேன்
மேலாயமாமகிழ்வாய்வேதியவோவேதியவோ. (௩௬)

ஒருபொருண் மேன்மூன்றடுக்கிய ஆசிரியத்தாழிசை.

வேதமுடியின்விழுப்பொருளாமாமகிழார்
நாதங்கடந்தொளிருநாட்செங்கமலத்தாள்
போதமிலேன்புன்முடிக்குப்பொன்முடியேயாகுமால்
மாமறையின்சென்னி வான்பொருளாமாமகிழார்
சேமத்தனிவாழ்வாஞ் சீர்ச்செங்கமலத்தாள்
நாமுறுமென்னோய்கட்கு நன்மருந்தேயாகுமால்.
ஆரணத்தின்சிரத்தார் பொருளாமாமகிழார்
பூரணவின்பாய பூஞ்செங்கமலத்தாள்
ஏரணமிலேனெஞ் சிருள்விளக்கேயாகுமால். (௩௭)

ஊசல். கலித்தாழிசை.

மாலாதுசிந்தைமலங்கழுவிநீறணிந்து
கோலாலமாகுமத்தத்துவனக்கூட்டமறுத்

நாலாலமுண்டானடிசூட்டிமாமகிழ்வாழ்
போலாமானிடம்பாடிப்பொன்னூசலாடாமோ
பொற்றொடியீர்புகழ்பாடிப்பொன்னூசலாடாமோ. (கஅ)

இதுவுமது. சந்தத்தாழிசை.

ஊசலாட்டிருவினைக்குளாய் மனநினைப்பினால்வருமறப்பினால்
ஓவுறாத்துயர்பிறப்பிறப்பினி லலைந்துலைந்துகழிவானநாள்
பேசலாவதலகற்பமெத்தனை பினிட்டநந்தமையளித்தவப்
பெரியமால்பிரமர்தலைசெய்மாலை பலபேசியேசிமுடிவுற்றில.
பூசலிட்டபரிகலமுமேதுவை விறைய்விறையணிகலங்கடாம்
பொதுவிருந்துகலகமதகற்றும் வகைபுகலுமாமறைமுதற்கலை
ஈசர்மாமகிழின்வாசர்மார்பிலெனி லேழையோநிலைமையாவதே
யினியவாரருளைநாடியாய்தொடியிராடியுய்துமினியூசலே.(கக)

வலைச்சியார். குறளடிவஞ்சிப்பா. வஞ்சியடி.

தொடித்தோள்வளை - வலைச்சியர்தரு
திருத்திகழ்நுதல் - மடப்பேட்டனம்
வடிக்கூந்தலி - னிணைக்கூந்தலே
விழிக்கிணைகய - லிணைத்துவரிதழ்
இணைப்பவளம - தெழிற்றரளம
திசைத்திருநகை - மொழிக்கமுதது
கழுத்திணைவளை - முலைப்புளினம
திடைக்கடம்படு - கொடிக்கிடம்பட
இயற்சுழியிணை - யறற்சுழியென
திரைக்கடலிணை - யகற்சடிதடம்
முழக்காலல - வணிற்கணைவரால்
புறக்காலுயர் - கமடத்திணை
இணைக்காமென - நிலக்கருநிகழ்
பொருட்பாலுமை - செயப்பெற்றனை - எனினும் - கூன்

தோளிணைக். இதுதனிச்சொல்.

காம்படியொன்றுங்கண்டிலமவ்வயிற்
றேம்பிழிகோதாயுரியுமென்வயிற்றே
யென்வயினினக்குமஃதாயின்மன்ற
பொன்மலைவில்லியார்புனைமாமகிழ்விரி
கானலந்துறைபெறக்காட்டுது
மேனலம்புயத்துவியன்றிணைமயக்கினே. சுரிதகம். (எ0)

நேரிசைவெண்பா.

திணைமயக்கமாமாற் சிறுவென்னெஞ்சக்கல்
லணையுமேயாசைக்கடலை - யிணையிலீர்

மாமகிழூற்றீரொருபான் மாலானைவைத்திருக்
காமகிழ்விற்காப்பாக்கலார்ந்து. (எக)

நிந்தாஸ்துதி-கட்டளைக்கலிப்பா.

காடுகட்டிக்காத்திரோர்சாண்கோவணங்
கண்டதில்லைக்கடைகட்டிக்காத்திங்கோர்
மாடுகட்டிவைத்திரதுபுல்லின்றி
மண்ணைநக்கிற்றுவையத்துமக்கொரு
வீடுகட்டிக்கொண்டதில்லையார்க்கேனும்
வேண்டுமென்றொருகாசும்வழங்கிலீர்
ஈடுகட்டியதில்லைநும்வாழ்வொன்று
மிசைவுடையிரம்மாமகிழ்வாயென்னே. (எஉ)

இதுவுமது.

என்னைக்கொண்டனிரென்னபயன்கண்டீர்
ஏழையான்காணிங்கெவ்வெவ்விதத்திலும்
பொன்னைக்கொண்டவர்பூக்கொண்டவர்முதற்
புங்கவரெல்லாம்போற்றிக்கிடக்கவும்
பின்னைக்கண்டிலிரொப்பாரையொப்பிலாப்
பெண்ணைக்கொண்டீர்போய்ப்பேச்சுத்துணைக்கங்கெய்
றன்னைக்கொண்டதென்பேய்க்கூத்துக்காணவோ
தருந்தருமாமகிழாளரல்லீரோ. (எங)

நேரிசைவெண்பா.

அல்லாருநெஞ்சை யடக்கமுயன் றலைவீர்
பல்லாயிரவழிகள் பார்த்தாலும் - ஒல்லாதே
மாமகிழ்வாணர் திருமங்கலநிறைவை
நாமதித்தலாலரங்கா ணன்கு. (எச)

ஒருபொருண்மேன மூன்றடுக்கிய வஞ்சித்தாழிசை.

நலநின்றமறைவேண்டா - வலங்கண்டீர்மகிழ்வாணர்ப்
புலம்வென்றசாதுள்ளார் - குலஞ்செல்வம்புணரீரோ.
ஏதுக்களவைவேண்டா - சோதிக்கமகிழ்வாணர்ச்
சாதுக்கடிருப்பாதப் - போதைப்போயப்புணரீரே.
அளவைபல்பெறவேண்டா - வொளிர்கிம்பர்மகிழ்வாணர்
தளர்வற்றசாதுள்ளார் - களனன்பிற்புணரீரே. (எரு)

தவம். சந்தத்தாழிசை.

புணரீரோபுணரீரோ புணர்தவமுடையீரோற்
பொருவின்மாமகிழ்வாணர்ப் புணரன்பர்ப்புணரீரோ
கொணரீரோகொணரீரோ யுமதன்போடெமதன்புங்
கொடுகூட்டித்தமிழாசு கவிபாடக்கொணரீரோ

உணரீரோயுணரீரோ மறைநாலுமுணராத
வுவரின்பநிலைதுன்ப மறநாடியுணரீரோ
இணரீர்பூங்குழலீரோ மலையார்மாமுலையீரோ
யினிவேறுதவமேனோ விதன்மேலேயுயநாமே. (எசு)

வண்டுவிடுதூது. சொனமடக்கு-இதுவுமது.

நாமேதுமிலையெஙகு நாமேதமிலமெங்கு
நகைமுல்லைநகையாரு மலராற்றார்மலர்வுற்றார்
பூமீதிலொருவர்க்கும் பூமீதிலிருவர்க்கும்
புகலொண்ணாப்புகலாஞ்சீர் பொருவில்லார்பொருவில்லார்
மாமேருவனாயென்று மாமேருதயமொன்று
மாமகிழ்வாணனார் மாமகிழ்வாணனார்
தாமாயுமணமாலை தாமாயும்வணமாலை
தருமின்பவண்டீர்காள் தருமின்கள்சென்றின்றே. (எஎ)

மேகவிடுதூது. அடிமடக்கு - வஞ்சிவிருத்தம்.

சென்றுமாமகிழ்ச்செல்வனார்
கொன்றைத்தாரினைக்கொணர்தியே
கொன்றைத்தாருனைகொண்டுல
கென்றுமொன்றுமாலெழிலியே. (எஅ)

பனிகண்டிரங்கல் - கட்டளைக்கலித்துறை.

ஒன்றலைக்குங்கலைவெண்மதிக்கும் முன்னுடைநதொதுங்கித்
தென்றலைக்கும்பிட்டுவாடைக் கிதனுசெய்துசென்றுசென்றுங்
குன்றலைக்குன்றவின் மாமகிழார்க்குங்குறிப்பித்தனன்
இன்றலைக்கும்பனிகரும்பனிகருந் நெஞ்சமென்செய்வனே. (எகூ)

காலம் - மடக்கு - ஆசிரியவிருத்தம்.

என்செய்கோமன்றிலையர் மாமகிழார்காலம்
இசையாரோல்வெம் மன்றிலையமிசைகாலம
பொன்செய்யுங்கலவ மாமையிலானுங்காலம்
புன்கனொடியாமு மாமையிலானுங்காலம்
கொன்செயமாமதவேட்குங் கரும்புகையாங்காலம்
கொடியார்களலருக்கங் கரும்புகையாங்காலம்
பின்செய்யச்சிலவெனுமென் பெண்மதிக்குங்காலம்
பேதையர்பின்னிருந்துற வம்பெண்மதிக்குங்காலம். (அ0)

இரங்கல். இரட்டையாசிரியவிருத்தம்.

காதலறியாக்களவலரோ - கண்டாயூர்க்குக்களவலரோ
கானமலர்ந்தபூங்கொன்றாய் - கவல்வேன்கருத்தீற்கிங்கொன்றாய்
நாதர்முடிப்பர்மாலையினே - நாடாயென்றன்மாலையினே
நாரிநாளுமிரங்காரோ - நாரிமாருமிரங்காரோ

சீதமளிக்குஞ்செயலையே - தேரூயுள்ளச்செயலையே
செழித்தங்கெழுந்தமதியாலே - திகைத்தேன்பெண்மைமதியா
வேதமுடிமேன்டத்தாரோ — விழையார்க்கருளைநடத்தாரோ [லே
வினைதீர்த்தருண்மாமகிழாரோ - வினையேனுளமாமகிழாரோ.(அக)

பாண் - இணைக்குறளாசிரியப்பா.

ஆர்கலியுலகத்துப்பேர்கலிக்குடைந்து
பல்வழியுழந்துநல்லறமோம்புபு
கற்பியல்வழாஅரிற்கடைநிலீஇயர்
இங்கிதம்பல்லவியல்விளியொடூஉம்
விளரியாழிசைபுதெருமந்துழன்று
கல்லேறுண்டுஞ்செல்லலோவின்றி
மூளரியிற்பொலியாவடுமடைக்
கயிறுபுரிபுரிந்தவயிரூராது
பலப்பலவெல்லியும்படுதுயிலொழிகென
வாம்பிகால்பொரநோந்தலைமடுத்து
மக்களுமனையுமொக்கலொடுமுணங்கிய
வுளைநெஞ்சழிந்தகொளைவலபாண்மக
கேண்மதிகேண்மதி
பாண்மகார்பன்டும்பருவரற்கரையிலர்
அதனான்
முத்தமிழாரியன்மொழிமரபுணர்ந்த
வாறிருபுலவரும்வேறுவேறுதெரிந்து
பன்னிருபடலத்தும்பகர்ந்திசினோரே
தாவினல்லிசையெனூஉந்தமிழ்கிளத்தும்மே
அதான்று
பாணாற்றுப்படுத்தவிருமுதுபனுவலும்
ஏனோர்கூறியபாடாண்டுறையுளும்
இலம்படுநம்மரபேற்றங்கண்டனை
அல்லதூஉம்
அரசுவீற்றிருந்ததமிழாய்சங்க
மினிதுவீற்றிருந்தபழம்புகழ்க்கூடலுள்
இன்னிசைவீணையிலிசைந்தோன்காண்கவென்
றம்மறைகிளந்தமெய்ம்முறைதேற்றுக்
கோலஞ்சிறந்தவாலவாயில்
அழகமரந்தணனருட்புரிந்தேத்திய
அந்நாள்
பாணபத்திரனெனும்பண்பமர்நம்முனோன்

திருமுற்றத்துப்பலகைபெற்றதூஉம்
திருந்தலர்த்தேய்க்கும்பருந்துவீழ்நெடுவேல்
கடாங்கவிழ்கவுட்டுக்கூர்ங்கோட்டாம்பல்
எருத்தம்பொலிந்துவருதிருத்தகுநாளினும்
அடிச்சேரலனெனமுடித்தாழ்ந்தொருநாள்
நொடித்தான்மலையினுலாத்தனைப்படித்தான்
கோப்பெருமுதலிகேட்ப
மதிமலிபுரிசைநொதுமலில்லாப்
பாணாற்றுப்படையிற்பரிசுபெற்றதூஉம்
கேட்டனைபோலுமிந்நாள்
நின்னின்மெலிந்தவென்னைநோக்கத்தை
அம்மையிம்மையும்மைவீடறியா
மம்மர்நோய்த்தெறூஉச்செம்மையுற்றனன்போல்
வெஃகாவுள்ளமுமஃகாவியல்பு
மிசைஇயகாண்டிநசைஇயினையெனினே
வாழியோபெரிதேவாழியோபெரிதே
பாழிமால்வரைப்பின்வாழியோபெரிதே
கள்ளங்கரந்தனையுள்ளஞ்சிறந்தனை
கடன்மடைதிறந்தவன்பிற்பொலிந்தனை
மெய்ம்மயிர்பொடிப்பக்கண்ணீர்வார
வியர்வரநகையெழநெக்குநெக்குற்றனை
தலையளிபழுத்தபத்தியி
னூற்றிருந்தன்னதோற்றஞ்சான்றனை
கண்டனைகலுழ்ந்தனைவிண்டவாய்குழறினை
மலைமகள்கொழுநவலைமகண்மகிழ்ந
தனதனற்றோழதமிழ்மறைமுதலி
கடவுட்கண்ணுதற்புனிதமால்வரை
கோட்டியதோளமாட்டியசிந்தை
மைந்தர்தம்வெறுக்கைமதமலைமதமலை
சுந்தரவிருண்டகந்தரக்கந்தர
காலற்காய்ந்தகழற்கால்வீர
பாலற்காத்தபவளப்படிய
மூவுலகிற்கொருநாயகநாயக
பாவலர்பரிசாம்பால்வண்ணநாத
தேவரிற்பெரியதேவதேவ
மூவருக்கொருமுதல்சேவலந்தலைவ
யாவரும்பெறலருமிறைவவானவ
வருட்பிரசாசபொருட்கருவூல

பித்தெமையகற்றியமத்தமுமிலைந்தவர்
கோவணநெற்றியர்வெற்றரைக்கோளினர்
சிலம்பணிகையர்சொலம்புனைபாதர்
ஆயினுமவரைப்பேயும்விட்டகலா
பாவணப்புகழாராவணவழகர்
ஆதலின்வைப்பினெட்பூதமயங்கா
துவரைபவரையேநல்விம்முதிரை
அமுதம்படுத்தநாட்டமதுமாலாக்கினர்
மாதரையுழலுமாதரைப்புரிவகை
யோதல்வேண்டுமதோஓதல்வேண்டும்
என்னினுமெண்ணுறினென்னினுமினியர்
நோவவுரையார்நொந்தகண்பாரார்
நாவலங்காரர்க்கென்றுவலங்காரச்
சொல்லியவிடுக்குவல்லவாவென்னத்
தூதுவேண்டிமேதகத்தெரிந்த
கொண்மூநாடினஃதெண்மூவெழுத்தீம்
றியைமெலியிடையின்முடிமிசைநின்ற
புயலினோடுமயர்வறப்புணர்மே
அன்னந்தன்னைமுன்னின்முன்னமோர்
அன்னந்தேடியினைமுநிலைபெறு
தலமர்ந்ததென்றைப்புலனுந்தப்போமே
அறுகாலஞ்சிறைச்சிறுபுளைச்செலுத்தின்
எண்காற்புள்ளுழையெங்ஙனஞ்செலுமே
சேறினுமதுநுகர்ந்துணர்வுமாறும்மே
வண்சிறையஞ்சுகமுய்ஞ்சிடப்போக்கெனில்
என்சுகநாடாகிடைமாறுக்கனே
குயிலைப்போக்கினதுபயில்கொடியர்றி
னினத்திரங்காதல்லதூஉமிறைக்குந்
தனக்கும்பேசிரான்றெனத்தருக்கித்திரிமே
நாரையையேவநாடாதுள்ளம்
பேரியல்வீடுபெற்றலைவற்றது
முன்னொருநாரைப்பொன்னெயின்மதுரையிற்
பூலையத்திசைபொருந்தாதடல்விடந்
தேவர்முன்வைத்தசெல்வர்க்கவர்தினம்
ஏவுசொற்கேட்டதினிலைநினைவிற்றே
தூதுணம்புறவோவுறவாந்தூதெண
மாலைத்தாராமாலைத்தாரா
மாலைத்தந்தேமாலைத்தருமே

அன்றிலோபேரினுமொன்றுதாமே
நின்றுநெஞ்சுளையநிந்தைகூறியற்றே
தென்றலோசென்றுற்றிரும்பிவாராதே
நன்றவரணிக்கோநாணுக்கோவிரையாம்
மற்றிவையொழிகபொற்றொடியாரை
வேண்டுகென்னின்மாண்டகுழலாவிற்
கேட்டவையுள்ளநாட்டமுற்றதனுற்
பசையிலவென்னுவிசைவிலவினிநன்
னெஞ்சுதுணையிருந்ததென்றஞ்சறுத்துய்த்தனன்
செய்யதாமரைகுழைத்துய்யவரவணைப்
பொய்யறுதமிழ்சுவைத்தபூந்தாட்கீழ்ப்படூஉ
மீளாவண்ணம்வாளாதேய்ந்ததால்
முன்னமம்மகத்தினம்மவம்மதி
மீண்டுறுமாயினீண்டுமிம்மதியு
மாவாவொருதமிதாவாவிருத்த
லவ்வளவன்றிச்செவ்விதிறுடின்
என்செய்கோவேழையேயென்செய்கோவேழையே
என்செய்கோவேழையேயென்செய்கோவேழையே. (அஅ)

நேரிசைவெண்பா.

கோமதிக்கும்வெம்மடையேகூமதிக்குந்தண்மடையாம்
மாமதிக்குந்தூய்மைசெயுமாமகிழே-வாமதிக்குப்
பச்சைபழுத்தார்பணிவாருளமிருக்க
விச்சைபழுத்தாரிடம். (அகூ)

கட்டளைக்கலித்துறை.

இடங்கொண்டமாமகிழ்க்கச்சியுமொற்றியுமென்னக்கல்லா
மடங்கொண்டவென்னுளம்வாழ்வுரைத்தாழ்வரைக்கீழரக்க
னடங்கொண்டநெஞ்சமுடங்கொண்டுபாடநடங்கொண்டதாட்
படங்கொண்டபாம்பர்விடங்கொண்டகண்டரைப்பாடுவனே (கூ0)

தேவபாணி - நிலைமண்டிலவாசிரியப்பா

பாடுமின்பாடுமின்பாடுமின்பாடுமின்
பாடுமின்பாடுமின்பத்தருள்ளீரே
முத்தியைவேட்டுளமுழுதுணர்வீரே
பத்திநல்வலைபடப்பாடுமினீரே
ஆரருள்பாடுமின்றாரருள்பாடுமின்
பேரருள்பதிவுறச்சீரருள்பாடுமின்
கள்ளவக்காதலிகாதல்கைவந்துணர்

உள்ளவக்கரவினனுறுதுயில்போலிய
நெஞ்சகஞ்சேந்து தஞ்சத்தினெக்குபு
வன்புகரைந்துக வென்புநெக்குருகி
மொய்ம்புமெலிந்துறப் பின்பெணம்பிறழ
வம்புபுலம்புகாத் தம்பரமாக
நடையுந்தளர்ந்திட வுடையுநெகிழ்ந்திட
வுடலங்குழையக் கடல்கவிழ்ந்தன்ன
மெய்வியர்வரும்பிடக் கையுநெகிழ்ந்து
செய்வகையின்றிப் பொய்வகையன்றிக்
கண்ணருவிகால வண்ணவாய்குழற
விண்மண்ணறியா துண்ணிறையார்வ
அன்புகனிந்தெங்க ளின்பனைப்பாடுமின்
முன்பனைப்பாடுமின் பின்பனைப்பாடுமின்
கம்பனைப்பாடுமின் செம்பொனினம்பலந்
தென்பொனைப்பாடுமின் றன்பிறப்பாடுமின்
பாடுமின்பாடுமின் னாருள்பாடுமின்
பாடுமின்பாடுமின்பாடுமின்பாடுமின்
நாரனைப்பாடுமின்பாடுமின் னாயிரம்
பேரனைப்பாடுமின்பித்தனைப்பாடுமின்
சீரனையன்பினல்வாரனைப்பாடுமின்
ஊரியற்சிவிகையாங்காரனைப்பாடுமின்
தேவனைப்பாடுமின் றேவர்சொல்லேவல்கொள்
வீரவிற்போர்வலமாரனை நீறுசெய்
கோவனைப்பாடுமின் கோவனைப்பாடுமின்
மூவனைப்பாடுமின்பாடுமின் முத்தமிழ்ப்
பாவனைப்பாடுமின்பகவனைப்பாடுமின்
பாவனைகட்கெட்டாத்தேவனைப்பாடுமின்
மூவருக்குமொருமுதல்வனைப்பாடுமின்
தேவருக்கும்பெருந்தேவனைப்பாடுமின்
பூமனைவாழ்வனையேமணிதலைதுமித்
தாமனைக்கடைதொறுமடுபலிக்கிடைகிலாக்
கோமனைக்கொன்றையந்தாமனைப்பாடுமின்
வாமனைக்கஞ்சுகமாக்கியைப்பாடுமின்
மாமனைமகமழிதரமறித்தலைபுனை
வீமனைப்பாடுமின்னீமனைப்பாடுமின்
மாற்றருந்திறலனைத்தோற்றமஞ்சுறவருங்
கூற்றினைக்குமைத்தவாற்றலனையேபாடுமின்
அந்தகன்கழுக்கடைகழுக்கடையாக்கிய

மைந்தனைப்பாடுமின்வானனைப்பாடுமின்
மேருவைக்குழைத்தவல்வீரனைப்பாடுமின்
பாரினைத்தேர்செய்தபண்பனைப்பாடுமின்
முப்புரம்பொடித்தொருமூவரைக்காவல்கொள்
செப்பனைப்பாடுமின்செல்வனைப்பாடுமின
அக்கதமிக்கெழுபக்கடல்புக்குட
றொக்கனைக்கீறுசக்கரத்தனைப்பாடுமின்
கக்குமக்கனல்விழியுக்கிரப்பெருவலி
மைக்கடகரியுரிநக்கனைப்பாடுமின்
கொக்கிறகணிசடைக்குழகனைப்பாடுமின்
சக்கரமரிக்கருடயவனைப்பாடுமின்
அண்ணலைப்பாடுமின்கண்ணுதற்பாடுமின்
எண்ணனைப்பாடுமினெழுததனைப்பாடுமின்
தண்ணனைப்பாடுமின்சதுமறைபாடிய
பண்ணனைப்பாடுமின்பரமனைப்பாடுமின்
கண்ணனையிடங்கொளங்கண்ணனையெம்மிரு
கண்ணனைப்பாடுமின்காண்வருசெவ்வந்தி
வண்ணனைப்பாடுமின்வரதனைப்பாடுமின
தண்ணருளான்மிகுதாயனைப்பாடுமின்
நேயனைப்பாடுமினேயமிலார்க்கெலாஞ்
சேயனைப்பாடுமின்றேசனைப்பாடுமின்
றாயனைப்பாடுமின்றொன்மைப்பசுக்களி
னாயனைப்பாடுமினாயனைப்பாடுமின்
மாயனைப்பாடுமின்மாயமிலாவேத
வாயனைப்பாடுமின்வள்ளலைப்பாடுமின்
ஐயனைப்பாடுமினப்பனைப்பாடுமின்
மெய்யனைப்பாடுமின்விகிர்தனைப்பாடுமின்
றுய்யனைப்பாடுமின்சோதியைப்பாடுமின்
கைபெறுநெல்லியங்கனியனைப்பாடுமின்
செய்யனைப்பாடுமின்றிருவனைப்பாடுமின்
உய்யவந்துதவியவொருவனைப்பாடுமின்
ஒருவனையென்னுளக்குருவனைப்பாடுமின்
உருவனைப்பாடுமினருவனைப்பாடுமின்
அருளனைப்பாடுமின்பொருளனைப்பாடுமின்
அருவுருவகன்றவத்தெருளனைப்பாடுமின்
இருளனைப்பாடுமினொளியனைப்பாடுமின்
மருளறுத்தெழுமலைமருந்தனைப்பாடுமின்
அருந்தளையவிழ்த்தருளாதியைப்பாடுமின்

பூவிருந்தகளியனொடு பொன்னிருந்தகடற்பள்ளி
தாமிருந்தார்குடியெனினுந் தவத்தருக்குமிடமிதுவே. (௨)
மலைமகளம்மலர்மகளிர் மருங்கிருப்பப்பெருங்கருணை
நிலைதருசைவத்தேனை நேசித்துநின்றனளே. (௩)
ஆனாலுந்திரையுண்டிங்கமுதுண்டுதமதென்று
வானாடர்காப்பதுண்டு வறியோமுங்குறுகினமே. (௪)

அவ்வளவில் - இதுதனிச்சொல்.

சுரிதகம்.

உள்ளந்தழைப்ப வுடலங்குளிர்ப்பக்
கள்ளநிரப்புக் காணாதொளிப்பச்
சேமநல்வைப்பா மாமகிழடிக்கே
இன்பப்பெரும் பேறிசைந்தனம்
அன்பனாடலினாய்ந்திசினோரே. (௰௩)

நேரிசை வெண்பா.

ஓராதுரைக்கலுற்றே னோர்மாமகிழின்சீர்
யாராலஃதுணர வற்றாகும் - பாரு
மரனாகக்காணுமே மாலற்றாலுற்ற
வரனாகக்காணுமே யாய்ந்து. (௰௪)

திருவடி.வகுப்பு - கட்டளைக்கலித்துறை.

ஆய்ந்துசிவந்தபடியோவருமறையன்பருள்ளந்
தோய்ந்துசிவந்தபடியோதொழும்பரைச்சூழ்நமனைக்
காய்ந்துசிவந்தபடியோவம்மாமகிழ்க்கீழ்க்கருணை
வாய்ந்துசிவந்தபடியோவம்மானின்மலரடியே. (௰௫)

பஃறாழிசைக்கொச்சகக்கலிப்பா.

தரவு.

மலரடிக்குமகிழாதம்மைத்துனன்மைந்தனையழித்தீர்
சிலரடிக்கும்வில்லடிக்கும்பிரம்படிக்குஞ்சிலையடிக்கும்
பலரடிக்குஞ்சொல்லடிக்கும்பரிந்தருளிமாமகிழின்
அலரடிக்குமகிழ்ந்திருந்தவடிகேளோர்விண்ணப்பம்.

தாழிசைகள்.

தாம்வீழ்வார்மென்றோளின்றுயிலினிதாங்கொலந்தத்
தாமரைக்கண்ணானுலகமென்றதமிழ்சுவைத்ததன்றே. (௧)
திருமேனியணிந்தசெழுமணிகளொடுசேயிழையார்
உருமானவுவமானமுணர்வனொருமானமிலேன். (௨)
தென்மதுரைக்கூடல்செய்தசெஞ்சடைவாழெழிலியன்றி
யின்மதுரவாயர்குழற்கேழெழிலியிணையிசையேன். (௩)

தேயாது வளராது திருமுடியார் பிறையன்றி
ஓயாமையுழல்பிறையையுவர் நுதலுக்குவமைப்பேனே. (௪)

கண்டத்துக்கொண்ட கடுக்கடவுளர்க் காத்ததுவிவர்கண்
கொண்டத்திண்கடு நெஞ்சுகுலைத்துக் காப்பதுகாண்பேன். (௫)

குமிழ்மாலையென்மூக்காங் குலவள்ளைத் தழைமிலைந்தாற்
றமிழாருஞ்செவியாகு மில்லையெனிற் றாங்காணேன். (௬)

அருண்மேனிப் பவளவொளி யல்லதுமற் றவர்துவர்வாய்
உருவாருங்கனியிதழுக் குவமையெந்தப் பவளமதே. (௭)

கையேந்து தழைப்பீலி கவின்றமுருந்தல்லாமே
மையேந்து முறுவலுக்கு மமையுமே பிறிதொன்றும். (௮)

இடப்பாதி கரத்திருந்த வெழிற்சங்க மன்றிமற்றை
முடக்கூனற் சங்கங்கொன் மிடற்றினுக்கு முற்றுவமை. (௯)

தோட்கமைந்த கரியுரியிற் றுதிக்கையிவர் தோட்கன்றி
பூட்கைபிற தோற்கையே தோற்கையே யுகுந்துதிக்கை. (௧௦)

திருக்கைபடக் குழைந்தசெழு மலையன்றித் திரண்முலைக்குப்
பருக்கைபிற மலையாகப் பார்க்கெனினு நயமின்றே. (௧௧)

இயல்பிறந்த துடியன்றே லியனடக விடனல்லால்
இயல்பிறநத பொருளெதனை யிவரிடைநே ரியம்புவெனே. (௧௨)

பூணியபொன் னுமையொடு மவ்வாமை புணர்கணையின்
றூணிபிறிதல்லாற் காற்றுணையுளதாந் தகைமைத்தே. (௧௩)

வாய்க்குமின்ப வுறுதிசொனும் வாய்மொழியா மறைமொழிபோ
னேய்க்குறுதிதரவலதே யிவர்நொடிக்குநுண்ணொடியே. (௧௪)

வல்லதெனின் - இது தனிச்சொல்.

சுரிதகம்.

யானேதவமுமின்னியநெஞ்சு
மானுவுடையனன்றி
மேனோர்விழைந்தமெய்ப்பத்திமேயினனே. (௯௬)

நேரிசைவெண்பா.

இனக்கொன்றைசூடிய மாமகிழெம்மான்
எனக்கொன்றைவேண்டி யிரப்பல்—கனக்குன்றை
வாங்கக்குழைத்தாய் வறிதமரர்க்கில்லிலென்னெஞ்
சீங்கக்குழையுய கோவின்று. (௯௭)

செவிலி கவறல் - விருத்தக்கலித்துறை.

இன்றுமாதராயென்னினைந் தென்செய்தாயினைவாய்
ஒன்றுபாதியாய்ச்செய்வதில் வல்லமையுடையான்
என்றறிந்துளார்ம மகி ழாளிசிறிசைத்தல்
நன்றுகேட்டிலைபச்சை மாலுமைசெயனயந்தே. (௬௭)

செவிலி கவறல்-இரட்டையாசிரியவிருத்தம் - மடக்கு.

பச்சைப்பெண்ணின்பங்குடையார் - பச்சைப்பெண்ணின்பங்குடை
பணிவாரணியாரன்பாலே-பணிவாரணியாரின்பாலே. [யார்
விச்சைநட்டாருலகுயவ-விச்சைநட்டார்விட்டாரோ
வேழவுரியார்மூன்வில்லாம்-வேழவுரியார்விளிந்தாரோ.
கச்சையரவமேபூண்வாங்-கச்சையரவமேமாதர்
கருத்துக்கமஞ்சவழகரெங்கள்-கருத்துக்கமஞ்சவருள்கண்ணார்.
பிச்சையெடுப்பர்மனைதோறும்-பிச்சையெடுப்பெரம்முளத்தே
பேரிற்பெரியமாமகிழார்-பேரிற்பெயராப்புகழாரோ. (௬௬)

இரட்டையாசிரியவிருத்தம்.

புகழ்மாமகிழாற்களவிருந்தார் புனையம்மலைவாழையைவாழப்
பொருவில்காஞ்சிப்பலதளியும் போற்றநாகமாக்கமுகு
மிசைசேரிஞ்சிநொச்சியொரு மூன்றும்வேவமூவரசு
மேவக்கடைகாலீர்க்குக்கோல் விண்டுவங்கிச்சிலீமுகமாத்
தகவேயிருந்தார்மகத்தக்கன் றலையைக்கொய்யாநாரத்தைத்
தலைமேற்றழைப்பவத்தியதடாங்கியெமக்குக்கதலியதாம்
வகையானைக்காகுரக்குக்காவைத்தீஞ்சமைத்தார்காடடன்
மதித்தார்விகிர்தவேடரன்றே வாழியவர்பொன்வணப்புகழே.

வாழ்த்து-ஒருபொருண் மேன்மூன்றடுக்கிய வெள்ளொத்தாழிசை.

வாழியர்வாழியர் வாழியர்வாழியர்
ஏழுயர்மாமகிழீசர்கழலென்றும்
சூழுமன்பரின்பத் துட்டொக்கு
மங்களமங்களமங்களமங்களம்
இங்கிதமாமகிழீசர்கழலென்றும்
பொங்குலகமின்பம்பொலிந்து.
சோபனஞ்சோபனஞ்சோபனஞ்சோபனம்
ஈபவின்பமாமகிழீசர்கழலென்றும்
தாபமறவான்வழக்கந்தந்து. (௱௧)

மங்களம்-இறுதியிற்கூன்பெற்றுவந்தவஞ்சித்துறைகள்.

தந்திரச்சீர்மறை
செந்தமிழ்மாமுறை
சந்ததமேத்தெந்தை
சுந்தரத்தாளுக்கு-மங்களஞ்சுபமங்களம். (௱௨)

தாளென்முடிபுனைந்
தாளுநிகித்தமண
வாளனம்மாமகிழ்
ஆளன்பாதங்கட்கு-மங்களஞ்சுபமங்களம். (௱௩)

பாதம்பணிந்தவர்
நோதலறப்புரி
போதனருட்குரு
நாதனந்தேசற்கு-மங்களஞ்சுபமங்களம். (௱௪)

தேசனடியவர்
நேசன்றிருவடல்
வாசனருட்பிர
காசன்பொன்னடிகட்கு—மங்களஞ்சுபமங்களம் (௱௫)

குருவாழ்க.

---

## ஆக்குவித்தோர்க்கெய்திய புறநிலைவாழ்த்து.

சுபமஸ்து.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

என்பாட்டிலிருந்தேனையென்பாட்டிலிச்சை
யிசைந்தியல்வல்லோர்முன்
பொன்பாட்டிலாசுவைத்தானிலம்பகமாங்
கலம்பகத்தைப்புனைந்துகேட்டான்
அன்பாட்டுமரங்கினுக்குநாதனுறை
னரங்கநாதனன்றோ
இன்பாட்டுமென்கண்மணிமாமகிழா
னீடூழியினிதுவாழ்க.

சுபமஸ்து.

மகிழ்மாக்கலம்பகம்.

முற்றுப்பெற்றது

---

# இந்நூல்செய்தவரால் செய்யப்பட்ட நூல்கள்.

## இதுவரையில் அச்சிடப்பட்டன.

### மொழிபெயர்ப்பு வாசகநடை.

பாராசரஸ்மிருதி ஆசாரகாண்டம்.
சங்கரவிஜயம்.
திருவெண்காட்டடிகள் புராணம்.

### பெரியபுராணம்வசனம்.

### செய்யுள் நடை.

### மூத்தபிள்ளையார்.

துவாதசநாமசங்கீர்த்தனம்.
திருப்பாதப்புகழ்ச்சிமாலை.
சரணதசகம்.
ஷண்முக சரணஷ்டகம்.
சிவபெருமான் அட்டோத்ரசதநாம மஞ்சரி.

## இனியச்சிறப்பதிப்பிக்கப்படுவன.

### சிவபெருமான்.

ஸ்ரீபாதத்திருப்புகழ்மாலை.
திருவடித்திருப்புகழ்மாலை.
திருப்பதியழகாயிரத்தந்தாதி.
அடைக்கலமாலை.
அபயமாலை.
சிறுவிண்ணப்பமாலை.
சரணாகதிமாலை.
அம்பலக்குறம்.
கையடைமாலை.
சந்நிதிமுறையீட்டுமாலை.
ஓலமாலை.
தைரியசரணியமாலை.
கையறவுமாலை.
அபராதக்ஷமிப்புமாலை.
இணைமணிமாலை.
சித்திரக்கட்டளைக்கவிமாலை.

தனிப்பதிகங்கள் அடங்கிய அருணைபாராயணத்திரட்டு.

### இளையபிள்ளையார்

திருப்பதத்திருப்புகழ்மாலை.
திருக்கழற்பல்லாண்டுமாலை.
சித்திரயமகவந்தாதி.
திருத்தணிகைச்சித்திரமாலை.
திருத்தணிகைப் பதிற்றுப்பத்தந்தாதி.
,, வெண்பாவந்தாதி.
திருத்தணிகை நான்மணிமாலை.
,, மும்மணிக்கோவை.
,, இரட்டைமணிமாலை.
,, கலம்பகம்.
திருப்போரூர் கலிவிண்ணப்பம்.
தனிப்பதிகங்கள்.

திருவொற்றியூர் வடிவுடையம்மை திரிபந்தாதி.

உ

சிவமயம்.

கணபதிதுணை.

# பட்டினத்துப்பிள்ளையார்

என்று வழங்கும்

# திருவெண்காட்டடிகள் சரித்திரம்

## அவரது பாடற்றிருமுறை.

இச்சரித்திரம்

ம-௱-௱ஸ்ரீ, நாகை.

**கண்ணு. இராமலிங்கபிள்ளையவர்கள்**

கேட்டுக்கொண்டபடி

சென்னை பிரசிடென்சி காலேசு தமிழ்ப்பண்டிதரும்

சமரசவேத சன்மார்க்க சங்கத்து

வித்துவான்களி லொருவருமாகிய

## தொழூவூர். வேலாயுதமுதலியாரால

வடமொழியினின்றும்

வாசகமாக மொழிபெயர்க்கப்பட்டு

சென்னை:

**மிமோரியல் அச்சுக்கூடத்திற்**

பதிப்பிக்கப்பட்டன.

லியுகாதி ௵ 4988.

விய௵ ஆடி௴

1886.



(இதன்விலை ரூ. கவ.)

திருச்சிற்றம்பலம்.

# முகவுரை.

ஒப்புமுயர்வுமில்லாத பேரின்பவீட்டுநிலை யுண்மையிதுவென்று, யாவர்க்கும் விளங்கும்படி காட்டவந்த குருமூர்த்தங்களுள் ஒருவராகிய இப்பட்டினத்துப் பிள்ளையார் சுமார் ௯௱-வருடத்திற்குமுன், காவிரிப்பூம்பட்டினத்திலே வேளாண்குலத்திலே அவதாரம் செய்திருக்கலாம் என்று தோன்றுகின்றது.

எப்படியென்னில், இவர் செய்தருளிய கோயினான்மணிமாலை முதலிய பிரபந்தங்கள் பதினோராந் திருமுறையுள் நம்பியாண்டார் நம்பிகளால் சேர்க்கப்பட்டிருப்பதனாலேயும், அவர்க்குப்பின்னிட்டு அவதரித்த சேக்கிழார் பெருமான் செய்தருளிய பெரியபுராணத்தினைப்பின்னிட்ட பெரியோர்கள் பன்னிரண்டாந்திருமுறையென்று அமைத்துவைத்துப் பூசித்து வருவதாலும், அச்சேக்கிழார் பெருந்தகையை மகா கவியாகிய கம்பர் திருக்கைவழக்கத்துள், "——காவலவன் - மண்ணிற்கடலின் மலையிற் பெரியதென - எண்ணி யெழுதிக்கொடுத்தவேற்றக்கை." என்று துதித்திருப்பதாலும், அக்கம்பர்காலம் "எண்ணியசகாத்தம் எண்ணூற்றேழின் மேற் கம்பநாடன் கண்ணியவரங்கமுன்னே கவியரங்கேற்றினானே" எனக்குறிப்பித் திருப்பதனாலுமென்றுணர்க.

இப்பட்டினத்தாரைச் செட்டியார் என்று வழங்குவதாகவே புராணத்துள்ளும் வசியர் என்று கூறப்பட்டுள்ளதே, வேளாளரென்றதெவ்வாறெனின், வேளாளர் வசியரென்றவிவகாரம் நூல்வழக்கென்பது வேளாண்மரபியலானேயாம் கூறினும். அன்றி இன்னும் அக்காவிரிப்பூம்பட்டினத்துள்ள வேளாண்செட்டிகளில் அவர்மரபினோர் உள்ளாராகக் கேள்விப்படுகின்றனம். ஆதலினென்க. இவரைத்தத்துவராயர், ஒழிவிலொடுகக நூலுடையார், தாயுமானவர், முதலிய பல பெரியோர்கள் துதித்திருக்கின்றனர்.

இலக்கணக்கொத்துடையார் தமது நூலுள் இவரையெடுத்தோதித் தாம் கூறுமிலக்கணத்துக்கு இவரதிலக்கியத்தினைமேற்கோள் காட்டினர்.

இவர் சிவானுபவத்திற் சிறப்புற்றிருந்தாற்போலவே கல்வி கேள்விகளிலும், செல்வத்திலும் மிகச் சிறப்புற்றிருந்தனராக விளங்குகின்றது.

இப்பட்டினத்துப்பிள்ளையார் துறவுபூண்டு திருவண்ணாமலைக்குவந்தங்கிருக்குநாளில் ஓர்கணிகையைக்காமுற்றுவிபரீதத்தை வெளிப்படுத்த அதனையவளுண்டு கருவுற்றுப்பிறந்தசேயே, திருப்புகழ்செய்தருளிய அருணகிரிநாதர் எனச் சிலர்கூறுகின்றனர். ஆயினும் அதனுண்மை வெளிப்படுவது அருமையாக விருத்தலாலும் எமக்குக் கிடைத்த முதனூல்களொன்றனுள்ளும் அக்கதையினைக் குறிப்பியாமையாலும் யாமும் அதனை விட்டனம்.

இவரது சரித்திரங்களைத் தமிழ்ச்செய்யுளாற் கூறும் புராணமொன்றும் வடமொழியாற் கூறும் புராணமொன்றும் வழங்குகின்றன. ஆனால் தமிழ்ச் செய்யுளாற் கூறும் புராணம் செய்த நூலாசிரியர் இலக்கியவிலக்கண சாத்திர சம்பிரதாயங்களிலே சிறந்த கல்வி கேள்வியுடையாராகவும் சிறந்தவாக்கியாகவும் தோன்றுகின்றார். ஆனால் அவர் செய்த புராணம் கையெழுத்துப்பிரதிகளில் பலவழுவுற்று வழங்கியபடி அச்சிடப்பட்டதாகக் காணுகின்றதன்றிச் சுத்தபாடநோக்கி யச்சிடப்படவில்லை யாதலின் அனேகவிடங்களிற்பொருள் விளங்கவில்லை. ஆனாலும் கருத்துமாத்திரம் மிகவாழமுடையதாகவிருக்கின்றது. ஆதலின் அந்நூலாசிரியர் சிறந்த பெரியோரென்பதற் கையமில்லை. அவரின்னாரெனப் பெயரும் வரலாறும் தெரியவில்லை

இவ்வாசிரியர் தாம் புராணஞ்செய்வதற்கு முன்னூல்பெருமை பெரியோர் வழங்கும் வாய்மொழிபற்றிக் கூறியதாக "வெண்காடர்குலவணிகரின்புகார மன்னிய நல்லறிஞர் சிலர் பாடிய கதையிதைத் தொகுத்து வகுத்துக்காட்டும் என்னவெழிற் புலியூரினிருங் கலைஞரறியு நெறியிசைத்துளேன்யான்." எனவும், "புலிமுனியும் பதஞ்சலியு முதலான பெரியோர் தம்புகழ்ப்புராணம், இலகியவாமலர்க்கு முனங்கதியடைந்தோரளவிலவை யிப்புராணம், பலபல வாமவைபோல வருவனவு மவ்வண்ணம் பகர்வராகும், கலைவடநூல்சொல்லி லென்சொல்லைவிடி லெவ்வாறுங்குறைகள் கழறலரே" எனவும் கூறினர்.

அப்புராணத்துள் அவ்வாசிரியர் கூறிய கதையாவது, புகார்ப்பட்டினத்தை யிந்திரன் கண்டவரலாறும், அந்நகருள் வெண்காடர் வாழ்ந்திருக்குநாளில் மருதூருடையார் சிறுவராகவந்து விலைப்படக்கொண்டு மகனாகப்பாராட்டி வருகையில் ஞானோபதேசஞ்செய்தவர் மறைய விவர் துறவுபூண்டு திருவிசைப்பா பல பாடிச் சேந்தனாரைச்சிறைமீட்டு முத்திக்குவிடுத்து ஒற்றியூரடைந்து திருமேனி சிவலிங்கமாக நிறுத்தியதுமாம். அன்றி யிப்பட்டினத்தார் அவதாரமும் இவரால் அருள்பெற்ற பத்திரகிரியார் சரி

நரும், இவர் செய்த மான்மியமும் கூறிலர். இவ்வாசிரியர் "பரந்த கதைதொகுத்து" என்றதால் இன்னு மநேக கதைகள் கூறுதொழிந்ததாகக் காட்டுகின்றது.

அதறகேற்ப அப்பட்டினத்துப்பிள்ளையார் திருப்பாடல்களாற் குறிப்பிக்கின்ற கருத்திசையப் பலகதைகளைப் பெரியோர்கள் கூறுகின்றனர். அக்கதை புராணத்துளில்லையாயினும் மறுக்கலாகாததாக விருக்கின்றது. மேலும் இந்நூலாசிரியர் வடமொழியிற் புராணமில்லையென்றே கூறினர். ஆகவே வடமொழிக்கதையிவர்க்குக் கிடைத்தபடி யன்று போலும்.

இனி எமக்குக் கிடைத்த வடமொழிப்புராணமோ "பவிஷ்யோத்தர புராணத்துள் திருவிடைமருதூர் மான்மியத்தில் கூறப்பட்டதாகக் கூறுகின்றது. கதைகள் சற்றேறக்குறைய சாங்கமாக விருக்கின்றது. ஆயினும் அதன் சொன்னடைமுதலியன விசேடஞ் சிறந்ததாகக் காணப்படவில்லை ஏனெனில் அடிகளார் அருளிச்செய்த திருப்பாடல்களின் கருத்தமைந்த தோத்திரங்களொன்றும் பொருந்தவில்லை.

இனி எமக்குக் கிடைத்த விருவகைப்புராணங்களுள்ளும் இப்பட்டினத்தடிகளுக்கு ஞானாசிரியர் திருவிடைமருதூருடையாராகிய சிவபெருமானே மகவாக வந்து முடிவிலருள்செய்து மறைந்ததாகக் குறிப்பித்திருக்கின்றது. அங்ஙனமிருக்க,

"திருவேடமாகித்தெருவிற்பயின்றெனைத்தேடிவந்து
பரிவாகப்பிச்சைபகருமென்றனைப்பதம்பணிந்தேன்
கருவாகுமேதக்கடற்கரைமேவக்கருதுமென்னை
யுருவாக்கிக்கொள்ளவல்லோவிங்ஙனேசிவனுற்றதுவே."

என்ற அவரது செய்யுளைப்பற்றிப் பட்டினத்தார் வழக்கப்படியடியவர் பூசைசெய்யு நிமித்தம் தேடிச் சென்றிருக்கையில் சிவபெருமான் அடியவர் கோலத்துடன் அவரது மனைக்குச்சென்று காதற்றவூசியு மோலையுங் கொடுத்து இருந்தபடி பாவனை தீக்ஷைசெய்து மறைந்ததாகச் சிலபெரியர் கூறுகின்றனர். ஆயினும் இருவகைப் புராணத்தைப்பற்றியே யாம் எழுதி யிருக்கின்றனம்.

தமிழ்ப்புராணத்துள், அடிகளார் அருளிச்செய்தது என்று முதல் குறித்திருக்கும் திருப்பாடல்களிற் சிலது - கிடைக்கவில்லை. அவற்றைப் பிறைக்குறி (      ) யிட்டு அதனுள் அம்முதற்குறிப்பெழுதியிருக்கின்றது.

இங்ஙனம் நாம் வெளிப்படுத்திய வாசகசரித்திரம் அத்தமி ழ்ப்புராணக் கருத்தையுந் தழுவி வடமொழிப்புராண சரிதத்தை முற்றுங்கொண்டு அடிகளார் திருப்பாடற்சரித்திரங்களை நல்லோர் பால் விசாரித்து எழுதியபடியென்றுணர்க.

இன்னும் அடிகளது பல அற்புத சரிதங்களும் பாடல்களு முள்ளனவாகக் கேள்விப்படுகின்றோம் ஆதலால், உணர்ந்த பெரி யோர்கள் அவற்றை அருள்செய்தனுப்புவார்களாயின் அவர்கட்கு வந்தனஞ்செய்து பெற்று இரண்டாமுறை யச்சியற்றி வெளிப் படுத்தப்படும்.

இப்பட்டினத்தார் மாணாக்கரும், திருப்பல்லாண்டு செய்தருளி யவரும், திருவிசைப்பா செய்தருளிய வொன்பது நாயன்மார்களு ள் ஒருவருமாகிய சேந்தனார் சரித்திரம் எமக்குக் கிடைத்த விரு வகைப்புராணங்களுள் குறித்தமட்டில் வெளிப்படுத்தலாயிற்று. இன்னும் வேறுசரித்திரங்களிருக்கின் அவற்றையும், திருவிசைப்பா வருளிச்செய்த மற்றைநாயன்மார்கள் சரித்திரத்தையும் கிடைத் துள்ளவர்கள் தயவுசெய்தனுப்புவார்களாயின் யாவர்க்குமுபயோக மாம்படி வெளிப்படுத்தப்படும்.

சென்னப்பட்டணம்,<br>
௧௮௮௫ளு ஆகஸ்டு

இங்ஙனம்<br>
பொ. வே.

சிவமயம்.

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

பட்டினத்துப் பிள்ளையார் என்று வழங்கும்

# திருவெண்காடர் சரித்திரம்.

## வாழ்த்து.

பிறவியளக்கரும்பிழைப்பொற்றையும்
உறுவினைக்கானும்வெறுவியசுரமும்
வெருவியவீடுமேவருவயாவின்
அருட்புணைகெழீஇயவலமோம்புபு
மடனிகுமூலகுமாதவத்தடத்துநீஇ
யிடரளறறுய்பாக்கினியமுக்கட்
கடமியலொற்றைக்கொம்பருன்றுபவே
தெறுபுலவேடர்கறுவுநனியஞ்சுபு
குறவிதோண்மணந்தவேல்விடலைவேண்டுபவே

அதாஅன்று.

பொதியிற்பொதிந்துமறையின்மணந்து
தண்டமிழ்சுவைத்துவையநீடுய்ந்த
சுவடுபடுமிடற்றுக்கவடுபலபோக்கி
மாவடியிருந்ததேவியலமுதை
உண்டுளங்குளிர்ந்துதொண்டகவிரம்
வாடாவார்வத்துமாண்பறம்பூத்த
பைங்கொடியடிநிழல்பற்றித்தொண்டத்
தொகைக்குடிசுற்றஞ்சூழ்பவாழியரோ
அருட்பிரகாசனன்பர்வாழியரோ
வாழியர்நலனேவாழியர்நிலனே
வாழியர்மறையேவாழியர்முறையே

ஆதிநடுவந்தமிலாவுண்மையனைப்பராபரனையனைத்துந்தாங்கும
சோதியைத்தாக்கற்றிருந்ததூயனைமாயாதசுகவாரிதன்னை [கும
யேதிலர்முப்புரம்பொடித்தவிறையவனையிச்சையெலாமிசைய நல்
மாதியலும்பாதியனைமணிமன்றமுடையானைமனத்துள்வைப்பாம்

ஆப்தவாக்கியத்தைச் சிந்தித்து, இப்போது தேவரீருக்குச் சிறிது வருத்தங்கொடுக்க வுடன்பட்டனம். ஆனால் அது எங்கள் மட்டிலே யன்றி யிவ்வுலகத்துள்ள மக்கட் பிறப்பை யுடையவர்கள் யாவர்க்கும் பெருநன்மை விளைக்கத்தக்கதாமாதலால் கடாக்ஷித்து தேவரீர் அந்த சிரமத்தை அங்கீகரித்துக் கொள்ளவேண்டும். அதாவது, முன் ஸ்ரீ சுதரிசநருடைய இன்ப சரித்திரத்தைச்சொல்லி முடித்தபின்னர், சிவானுக்கிரகத்தால் பரிபாகியாயிருந்த சிவசகனை குபேரன் இப்பூவுலகத்திற் றென்றிசைக் காவிரிப்பூம் பட்டினத்தில் வசியனாகப்பிறந்து, கடவுளை மகவாகப்பெற்று வாழ்ந்திருந்து சிவஞானியாய்ச்சித்தி முத்திகளை யடைந்ததாகத் திருவுளம்பற்றினீர். அச்சரித்திரத்தை விரிவாஙெங்கட்கு விளங்கச் சொல்லி யருளவேண்டுமென்று பிரார்த்தித்து விண்ணப்பித்தனர்.

அதுகேட்ட சூதமுனிவர் பரவச முடையவராய்க் கண்களில் ஆநந்த நீர்பெருக, உடம்பு புளகம்போர்ப்ப, சிறிதுநேரங் கம்பித்தபடி தியான யோகத்திருந்து, ஐயா முனிவர்களே! நீங்கள் செயற்கரிய காரியங்களைச் செய்துமுடித்து நல்லபக்குவம் பழுத்த சத்திநிபாதமுடையவர்கள் ஆதலால் இக்கதையைக் கேட்க விருப்பமுற்றீர்கள். சாதுக்களுக் கன்றிச் சிவஞானிகள் கதையைக் கேட்கும் விருப்பம் ஏனையர்க்குண்டாகாது. வண்டும், ஈயும் ஆறு காலுடைய சிறு பறவை யென்று பெயராலும் அவயவத்தாலும் ஒருவாறு ஒத்திருந்தாலும் வண்டு வாசனையுள்ள மதுரமான பூக்களின் தேனையே விரும்பித் தேடிச் சென்று உண்ணும்; ஈயோ வெனில் நாற்றமுடைய அழுகற்புண்ணின் சீயையே விரும்பியுண்ணும். ஆதலால் உங்கள் தரத்திற்கேற்ற கதையையே கேட்க விருப்பமுற்றீர்கள். இதை யுங்கட்குச்சொல்லுதலால் நானும் புனிதனாய் மெய்ப்பயன் பெற்றவனாவேன் என்று இனிய வார்த்தை கூறிப் பின்பு தமது ஆசிரியனைத் தியானித்து வழிபட்டு முனிவர்கட்கு அத்தெய்வ சரிதத்தினைக்கூறத்தொடங்கினர்.

கேளும், அந்தணாளர்களே! இக்கதை முன்னொருகாலத்தில் சாமவேத சாகையைச்சார்ந்த சாந்தோக்கியமுதலிய வுபநிடதங்களால் சுத்த ஞானியென்று புகழ்ந்தெடுத்து ஓதப்பட்ட சிவஞான முனிவராகிய ஸ்ரீ உபமன்னியபகவான், தன்மாணாக்கராகிய பல முனிவர்களுக்கும் கூறியதாக பௌஷ்யோத்தர புராணத்திற் கூறப்பட்டுள்ளது.

புராண வரலாறு.

எவ்வாறெனில் தன்னை யடைந்தவர் யாவர்க்கும் நிர்ப்பயத்தையும், துக்கநாசத்தையும், நோயில்லாமையையும், இஷ்டசித்தி

யையும், நித்திய சுகத்தையும் கொடுத்து ஊழிகாலத்து லுலகமெல்லா மழிந்தாலுந் தன் தலைவர்போல அழிவற்றோங்குஞ் சத்திய ஞான சொருபமாகிய ஸ்ரீகைலாசமலையின் சாரலிலே புகழெனப் பரந்து பொறுமைபோலோங்கித் தயவிற்குளிர்ந்து ஆசாரமொப்பப்பூத்து உதாரமென்னக் காய்த்துப் பழுத்தசெல்வஞ் செழித்த இன்ப மயமான வனமொன்றுண்டு. அதில் கற்றுணர்ந்தோரது அடக்கம்போலும் விளங்கும் பர்ணசாலை நடுவே ஒழுக்கங் கல்வியெல்லாம் வடிவெடுத்தாற்போலும் விளங்கிய படிவமுடையவர்களாய்க்கேட்டல், சிந்தித்தல், தெளிதலென்னுங்கடன் பூண்ட பல முனிவர்களாகிய சீடர்கள் புடைசூழ ஸ்ரீமன் உபமன்னிய பகவான் எழுந்தருளியிருக்கும்போது, அம்மாணவர்களாகிய முனிவர்கள் எழுந்து வணங்கி நின்று, ஓ! வியாக்கிரபாதமுனி புத்திரரே! சிவபெருமானால் அனுக்கிரகிக்கப்பட்ட திருப்பாற்கடலையுண்ட செல்வரே! வேதாகமங்களின் எல்லை கண்ட வெம்பெருமானே! ஸ்ரீகண்ணனார் சிவதீக்ஷாகுருவே! அடியோங்கள் உலகியலும் அருளியலும் ஒருமிக்கவுணர்ந்து உய்யும்படி ஸ்ரீ பத்தபரமேசுரர்களென்று வேதாகமங்களால் புகழப்பட்ட சாதுக்களாகிய சிவனடியார்கள் சரித்திரங்களைச்சொல்லியருளவேண்டுமென்று விண்ணப்பித்தனர்கள்.

அப்போது ஞானாசாரியராகிய ஸ்ரீ உபமன்னிய பகவான் நெஞ்சங்குளிர்ந்து, உடல்பூரித்து, என்பு நெக்குவிட்டு, அன்பினுருகிப்பெருகி ஆராமைமேலிடக் குழைந்து குழைந்து பரவசராய்த்தம்பித்துநின்று, தெளிந்து கம்பிக்கச் சொல்லுவாராயினார். ஐயா! முனிவர்களே! எல்லாமுடைய விறைவராகிய சிவபெருமான் திவ்விய சரித்திரம்போலவே, அச்சிவமுணர்ந்த பெரியோர்களாகிய அடியார்களது அற்புதசரித்திரமும் அளவிடுதற் கரியதென்று இன்னமும் வேதாகமங்களே முறையிடுகின்றனவானால், நான் என்னென்று அறிந்து அளவிட்டுச்சொல்லப்போகின்றேன் உடம்பெல்லா நாவாகவும், ஊழிகாலமெல்லா நாளாகவும் கொண்டு இவ்வுலகமுழுவதும் ஒருங்குகூடிச் சிறிது சிறிதே எடுத்துக் கூறிச் சென்றாலும் முற்று முடியாதே!! நாம் என் செய்யக்கடவோம். ஆயினும் "கடலோடிப்பொருள்தேடினேன்." மலைகடந்து மருந்துதந்தேன்" என்பாரைப்போல, ஆற்றலுக்குத் தக்கபடி சிறிது கூறுவேன். கேட்பீர்களாக, ஓ! அந்தணாளரோ! உணர்ச்சி தேய வரும்பிறப்புவேதனைக்கும், பொறிபுலன்மனமுதலியவெல்லாங்கலங்கி யுடல் சோர வரும் மரணவேதனைக்கும் மிகப்பயந்து, அவ்விரண்டையுமொருமிக்கத் தொலைக்கும் வழி யெது வென்று தலையிற்றீப்பற்ற நீரைத்தேடிச் செல்லுவோனைப்போலுந் தேடிச்

செல்லுந் தேட்டமுடைய நீவிர்களாகிய வுங்கட்குச் சொல்லத் தக்கதொரு கதையுள்ளது; அது சுத்த மந்தனையும் அதிசீக்கிரத்தில் தீவிரனாக்கிப் பக்குவம் வருவித்துப் பிறவிநோய் நீக்கி அமுத நிலையாகிய முத்திசித்திகளைத்தரத்தக்கது; கேட்டவர்கள் யாரையும் மஹா புனிதராக்க வல்லது; சாவாநிலைக்கு வழிகாட்டியாயுள்ளது; சோகமோக மயக்கங்களை நாசஞ்செய்வது; அஞ்ஞானக்காட்டுக்குப் பெருந்தீயாயுள்ளது; ஞானமுதமழைபோல்வது பேரின்பப் பிரவாஹமாயிருப்பது; எவ்வகைப்பட்ட பயத்தையு மொழிக்கும் நற்றுணையாவது; நினைக்க நினைக்க நெஞ்சுருகச்சுவைப்பது! சொல்லச்சொல்ல நாவினிற்றேனூறுவது; கேட்கக் கேட்கக் கிளர்ச்சியாய்த் தைரியத்தை விளைப்பது; தருமங்களுக்கெல்லாம் நிக்ஷேபம் போன்றது! செல்வங்களுக்கெல்லாம் காரணமாயுள்ளது; தேடுவார் தேடத்தக்க பொருளிதுவெனக்காட்டும் தீபமானது; முன் சைவாசிரியராகிய ஸ்ரீநந்தியடிகள் அருள்பெற்ற சனற்குமாரர் வழியில் வழங்கியது; சுவேதாரணியர் சரித்திரம் என்னும் திருவெண்காட்டடிகளுடைய திருக்கதை இதனைமற்றக்கதைகள்போல நினையாது உள்ளூன்றிச் சிந்தித்தறியவேண்டும். யாவர்க்கு மங்கலமுண்டாகவென்று சொல்லலாயினர்.

சிவபெருமான் திருவுலா வண்ணம்.

ஐயா முனிவர்களே! முன்னொருகற்பத்தில் புண்ணியமேலிட்டாற் குபேரபதவியைப்பெற்றிருந்த வொருவர், கீழ்ப்போன சன்மங்களில் சரியை, கிரியை யென்னும் இரண்டுபாதங்களையும் அனுட்டித்து முறையே தாதமார்க்கம், சற்புத்திரமார்க்கங்களைக் கடந்து பரிபாகியாய் மேல்யோகபாதத்தை அனுட்டித்துச் சகமார்க்கமடைந்ததால் சிவனுடைய தோழனென்று உலகுபுகழச் சிவபெருமானிடத்து அன்பும் நண்பும் பெருக வாழ்ந்திருக்குங் காலத்தில் ஒருநாள் ஸ்ரீகைலாசத்திற்குச் சிவதரிசனஞ்செய்யும்படி சென்றிருந்தார். அப்போது அங்கே, சர்வகாரணராகிய சிவபெருமான்மேல் நடக்குங் கருமத்தால் தாங்கொண்ட சகளகோலத்திற்கு ஏற்க; உலகில், இலீலாவிலாசமாக உலாவரும்படி திருவுள்ளத்தில் அருளிச்சைகொண்டு அபிநயித்து, உலகமாதாவாகிய மஹாதேவியாருடன் கூடி, இடபாரூடராய் ஸ்ரீகணபதி, முருகப்பிள்ளையார், வீரபத்திரர், கூர்மாண்டர், ஆடகேசுரர், காலாக்கினிருத்திரர், ஸ்ரீநந்தியடிகள், பிருங்கிமுனிவர், பிங்கிருடி, குண்டோதரர், கும்போதரர், பாணுகம்பர், சங்குகன்னர்முதலிய பிரமதகணநாதீசுவரர்களெல்லாம் ஜயஜயவென்று புகழ்ந்து சேவித்துவர, கயிலைத் திருவோலக்கம் தரிசிக்கவந்திருந்த பிரமதேவர், விஷ்ணு, இந்திரன், ஆதித்தர், வசுக்கள், மருத்துவர், உருத்திரர் திக்குப்

பாலகர், முதலியதேவர்களும, அகத்தியர், ததீசி, பிருகு, மார்க்கண்டர், வசிட்டர், அங்கிரா, பரத்துவாசர் முதலிய முனிவர்களும், அரக்கர், இராக்கதர், கருடர், காந்தருவர் சித்தர், வித்தியாதரர், இயக்கர், கிம்புருடர் முதலிய கணங்களும் புடைசூழ்ந்து ஹர!! ஹர!! வென்று போற்றுதல் செய்யத் தமது அன்பின் றோழராகிய குபேரனுரும் பிரியாநேயத்திற் றொடர எழுந்தருளி வருகையில், வழிக்கணுள்ள ஸ்ரீ இமயம், மந்தரம், பசுபதீசரம், கேதாரம், காசி, ஸ்ரீசைலம், காளத்தி, வடவனம், காஞ்சி, அருணுசலம், விருத்தகிரி முதலிய மஹாக்ஷேத்திரங்களின் விபவங்களைக் கடாக்ஷித்து, எமது பிதாவாகிய வியாக்கிரபாதர் பேரன்பு செய்து பூசித்திருந்து நித்தந் திருநடநங் கும்பிடுங்காரணத்தாற் பெரும்பற்றப் புலியூரென்றோர் காரண நாமம் பெற்று விளங்கும் ஸ்ரீ சிதம்பர மஹாக்ஷேத்திரத்தின் மங்கலங்களை யனுக்கிரகித்துச் சிதாகாச ரஹசியத்தை வெளிப்படுத்தும் திருச்சிற்றம்பலம் என்னும் தெய்வத்தானத்துள் வீற்றிருந் தருளியிருந்தார்.

அந்த நாளில் தனதராகியதோழர், பெருமானுரையடைந்து போக்குவரவு ஒன்றுமில்லாத பரிபூரணப் பொருளாகிய எம்பெருமானே! ஒன்றினும் விருப்பும் வெறுப்பும் தேவரீர்க்கில்லையாயினும் அடியோங்கள்வேண்டுவதை யளித்துக்குறைமுடிப்பதே திருவருளினியற்கை யாதலால் இனி மற்றைய திருப்பதிகளையுஞ் சென்று, பெருமான் செய்யும் அருளப்பாட்டினைத் தரிசிக்கவென்று என்னுள்ளத்து ஓராசையெழுகின்றதென்று விண்ணப்பித்தனர். அதுகேட்ட ஆளுடையாரும் தமது தோழனுர் குறையை முடிக்கத் திருவுளஞ்செய்து ஸ்ரீநந்திதேவர் முதலிய பிரமதகணங்களுந் தேவர் முனிவர் முதலிய யாவரும் புடைசூழ்ந்து சேவித்துவரச் சிதம்பரத்து நின்றும் எழுந்தருளி ஸ்ரீ சுவேதாரணியமென்னும் வடமொழிப் பெயரையுடையதாய் நினைத்தவர்கள் பாவத்தையெல்லாம் போக்கத்தக்க திருவெண்காடென்னுந் தலத்தை யடைந்தருளினுர்.

அப்போது, ஆளுடையார் பக்கலாக வரும் சகராகிய குபேரனுர், தமக்கு உத்தமசத்திநிபாதம் பிறந்து இனி ஞானசன்மார்க்கத்தை யடையும் பருவம் சமீபித்திருந்தபடியால் அத்திருவெண்காட்டருகு தேவர்களுலகங்களினுஞ் சிறந்த அழகுசெல்வம் வாய்ந்திருந்த காவிரிப்பூம்பட்டினத்தைப் பார்த்தார். அவ்வளவில் அது இவர் கண்ணையும் மனத்தையும் கவர்ந்துகொண்டது. ஏனெனில், முன்னுளிலே தேவேந்திரன், தன்னுடைய தாயாகிய அதிதியானவள் சாயாவனமாகிய திருச்சாய்க்காட்டுக்குத் தினந்தோறும் சிவதரிசனஞ் செய்யும்பொருட்டு வருவதைக்கண்டு, அவ்வருத்த

விண்ணிறந்துமண்ணிறந்துவெளியிறந்துவொளியிறந்து
எண்ணிறந்துநின்றநிலையேகரித்தாய்நெஞ்சமே. (எ)

பார்த்தவிடமெங்கும்பரமெனவேயுட்புறம்புங்
கோத்தபடியுண்மையெனக்கொண்டனையேநெஞ்சமே. (அ)

ஊரிறந்துபேரிறந்துவொளியிறந்துவெளியிறந்து
சீரிறந்துநின்றநிலைசேர்ந்தனையேநெஞ்சமே. (கூ)

ஆண்பெண்ணலியென்றழைக்கவரிதாய்நிறைந்து
காணவரிதாயவிடங்கண்ணுற்றாய்நெஞ்சமே. (க0)

ஆங்காரமச்சமகற்றியறிவினொடு
தூங்காமற்றூங்கிச்சுகம்பெற்றாய்நெஞ்சமே. (கக)

ஆதியாய்நின்றவகண்டபரிபூரணத்தைச்
சாதியாநின்றவிடஞ்சார்வுற்றாய்நெஞ்சமே. (கஉ)

விருப்புவெறுப்பில்லாதவெட்டவெளியதனில்
இருப்பேசுகமென்றிருந்தனையேநெஞ்சமே. (கங)

ஆருமுறாப்பேரண்டத்தப்புறத்துமிப்புறத்தும்
நீருமுப்புமென்னநிலைபெற்றாய்நெஞ்சமே. (கச)

உடனாகவேயிருந்துமுணரவரியானோடு
கடனீருமாறும்போற்கலந்தனையேநெஞ்சமே. (கரு)

செடியகத்தைப்போக்கிநின்றசழக்கறுத்துப்
படிகத்துக்கும்பம்போற்பற்றினையேநெஞ்சமே. (கசா)

மேலாகியெங்கும்விளங்கும்பரம்பொருளிற்
பாலூறுமென்சுவைபோற்பற்றினையேநெஞ்சமே. (கஎ)

நீரொடுதண்ணாலிவிண்டுநீரானவாறேபோல்
ஊரொடுபேரில்லானோடொன்றினையேநெஞ்சமே. (கஅ)

இப்பிறப்பைப்பாழ்படுத்தியிருந்தபடியேயிருக்கச்
செப்பவரிதாயவிடஞ்சேர்ந்தனையேநெஞ்சமே. (ககூ)

மேலாம்பதங்களெல்லாம்விட்டுவிட்டாராய்ந்து
நாலாம்பதத்தினடந்தனையேநெஞ்சமே. (உ0)

கடங்கடங்கடோறுங்கதிரவனூடாடி
யடங்குமிடந்தானறிந்தன்புற்றாய்நெஞ்சமே. (உக)

கற்றவனாய்க்கேட்டவனாய்க்காணானாய்க்காண்பவனாய்
உற்றவனாய்நின்றநிலையொன்றுபட்டாய்நெஞ்சமே. (உஉ)

நாலுவகைக்கரணநல்குபுலனைந்துமொன்றாய்ச்
சீலமுற்றுநின்றநிலைசேர்ந்தனையேநெஞ்சமே. (உங)

விட்டிடமுந்தொட்டிடமும்விண்ணிடமுமண்ணிடமுங்
கட்டுமொருதன்மையெனக்கண்ணுற்றாய்நெஞ்சமே. (௨௪)

எங்கெந்தநாளுமிருந்தபடியேயிருக்க
அந்தச்சுகாதீதமாக்கினையேநெஞ்சமே. (௨௫)

வாக்கிறந்துநின்றமனோகோசரந்தனிலே
தாக்கறவேநின்றதிலேதலைசெய்தாய்நெஞ்சமே. (௨௬)

எத்தேசமுநிறைந்தேயெக்காலமுஞ்சிறந்து
சித்தாயசித்தினிடஞ்சேர்ந்தனையேநெஞ்சமே. (௨௭)

தாழாதேநீளாதேதன்மயமதாய்நிறைந்து
வாழாதேவாழமருவினையேநெஞ்சமே. (௨௮)

உள்ளும்புறம்புமுவட்டாதவானந்தக்
கள்ளருந்திநின்றதிலேகண்ணுற்றாய்நெஞ்சமே. (௨௯)

வாதனைபோய்நிட்டையும்போய்மாமௌனராச்சியம்போய்
பேதமறநின்றவிடம்பெற்றனையேநெஞ்சமே. (௩0)

இரதம்பிரிந்துகலந்தேகமாம்வாறேபோல்
விரகந்தவிர்ந்தனல்பால்மேவினையேநெஞ்சமே. (௩௧)

சோதியான்சூழ்பனிநீர்சூறைகொளுமாறேபோல்
நீதிகுருவின்றிருத்தாள்நீபெற்றாய்நெஞ்சமே. (௩௨)

நெஞ்சொடுமகிழ்தல் முற்றிற்று.

---

பட்டணத்துப்பிள்ளையார்

## உடற்கூற்றுவண்ணம்.

தன தன தான, தன தன தான, தந்த தனந்தன தந்த தனந்த
தனனதனந்த, தனனதனந்த, தானனதானன தானதனந்த.

ஒருமடமாதுமொருவனுமாகி, யின்பசுகந்தருமன்புபொருந்தி
யுணர்வுகலங்கியொழுகியவிந்து, வூறுசுரோணிதமீதுகலந்து.

பனியிலொர்பாதிசிறுதுளிமாது, பண்டியில்வந்துபுகுந்துதிரண்டு, பதுமவரும்புகமடமிதென்று, பார்வைமெய்வாய்செவிகால்கைகளென்ற,

உருவமுமாகியுயிர்வளர்மாத, மொன்பதுமொன்றுநிறைந்துமடந்தை, யுதரமகன்றுபுவியில்விழுந்து, யோகமும்வாரமு நாளுமறிந்து.

மகளிர்கள்சேனைதரவணையாடை, மண்படவுந்தியுதைந்துகவிழ்ந்து, மடமயில்கொங்கையமுதமருந்தி, யோரறிவீரறிவாகிவளர்ந்து.

ஒளிநகையூறலிதழ்மடவாரு, வந்துமுகந்திடவந்துதவழ்ந்து
மடியிலிருந்துமழலைமொழிந்து, வாவிருபோவெனநாமம்விளம்ப.

உடைமணியாடையரைவடமாட, வுண்பவர்தின்பவர்தங்களொடுண்டு, தெருவிலிருந்துபுழுதியளைந்து, தேடியபாலரொடோடிநடந்து.

அஞ்சுவயதாகிவிளையாடியே. (௧)

உயர்தருஞானகுருவுபதேச, முத்தமிழின்கலையுங்கரைகண்டு
வளர்பிறையென்றுபலரும்விளம்ப, வாழ்பதினாறுபிராயமும்வந்து.

மயிர்முடிகோதியறுபதநீல, வண்டிமிர்தண்டொடைகொண்டைபுனைந்து, மணிபொனிலங்குபணிகளணிந்து, மாகதர்போகதர்கூடிவணங்க.

மதனசொரூபனிவனெனமோக, மங்கையர்கண்டுமருண்டுதிரண்டு, வரிவிழிகொண்டுசுழியவெறிந்து, மாமயில்போலவர்போவதுகண்டு.

மனதுபொறாமலவர்பிறகோடி, மங்கலசெங்கலசந்திகழ்கொங்கை
மருவமயங்கியிதழமுதுண்டு, தேடியமாமுதல்சேரவழங்கி.

ஒருமுதலாகிமுதுபொருளாயி, ருந்ததனங்களும்வம்பிலிழந்து
மதனசுகந்தவிதனமிதென்று, வாலிபகோலமும்வேறுபிரிந்து.

வளமையுமாறியிளமையுமாறி, வன்பல்விழுந்திருகண்களிருண்டு
வயதுமுதிர்ந்துநரைதிரைவந்து, வாதவிரோதகுரோதமடைந்து.

செங்கையினிலோர்தடியுமாகியே. (௨)

வருவதுபோவதொருமுதுகூனு, மந்தியெனும்படிகுந்திநடந்து
மதியுமழிந்துசெவிதிமிர்வந்து, வாயறியாமல்விடாமன்மொழிந்து.

துயில்வருநேரமிருமல்பொறாது, தொண்டையுநெஞ்சுமுலர்ந்துவறண்டு, துகிலுமிழந்துசுணையுமழிந்து, தோகையர்பாலர்கள்கோரணிகொண்டு.

கலியுகமீதிலிவர்மரியாதை, கண்டிடுமென்பவர்சஞ்சலமிஞ்ச
கலகலவென்றுமலசலம்வந்து, கால்வழிமேல்வழிசாரநடந்து.

தெளிவுமிராமலுரைதடுமாறி, சிந்தையுநெஞ்சுமுலைந்துமருண்டு
திடமுமலைந்துமிகவுமலைந்து, தேறிநலாதரவேதெனநொந்து.

மறையவன்வேதனெழுதியவாறு, வந்ததுகண்டமுமென்றுதெளிந்து, இனியெனகண்டமினியெனதொந்த, மேதினிவாழ்வுநிலாதினிநின்ற.

கடன்முறைபேசுமெனவுரைநாவு,றங்கிவிழுந்துகைகொண்டு மொழிந்து, கடைவழிகஞ்சியொழுகிடவந்து, பூதமுநாலுசுவாசமுநின்று.

நெஞ்சுதடுமாறிவருநேரமே. (௫)

வளர்பிறைபோலவெயிறுமுரோம, முஞ்சடையுஞ்சிறுகுஞ்சியும்விஞ்ச, மனதுமிருண்டவடிவுமிலங்க, மாமலைபோல்யமதூதர்கள்வந்து.

வலைகொடுவீசியுயிர்கொடுபோக, மைந்தரும்வந்துகுனிந்தழுநொந்து, மடியில்விழுந்துமனைவிபுலம்ப, மாழ்கினரேயிவர்காலமறிந்து.

பழையவர்காணுமெனுமயலார்கள்,பஞ்சுபறந்திடநின்றவர்பந்தரிடுமெனவந்துபறையிடமுந்த,வேபிணம்வேகவிசாரியுமென்று.

பலரையுமேவிமுதியவர்தாமி,ருந்தசவங்கழுவுஞ்சிலரொன்று[பை. பணிதுகில்தொங்கல்களபமணிந்து, பாவகமேசெய்துநாறுமுடம்

வரிசைகெடாமலெடுமெனவோடி, வந்திளமைந்தர்குனிந்துசுமந்து, கடுகிநடந்துசுடலையடைந்து, மானிடவாழ்வெனவாழ்வெனநொந்து.

விறகிடைமூடியழல்கொடுபோட, வெந்துவிழுந்துமுறிந்துநிணங்க, ளுருகியெலும்புகருகியடங்கி, யோர்பிடிநீறுமிலாதவுடம்பை.

நம்புமடியேனையினியாளுமே. (௬)

வண்ணமுற்றிற்று.

---

பட்டினத்துப்பிள்ளையார்

திருப்பாடல் முற்றிற்று.

---